


ஓவியங்கள்

சித்ரலேகா

விளக்கம்

பி. ஸ்ரீ.

சித்ரலேகா வெளியீடு

நெ. 2, மாசிலாமணி முதலியார் காலனி,

சலிவன்ஸ் கார்டன், மயிலாப்பூர், சென்னை-4

# திருவெம்பாவைக் கவிச்சித்திரங்கள்

மணிவாசகப்பெருமான் பல தலங்களையும் தரிசித்துக் கொண்டே திருவண்ணாமலைக்கு வந்து சேர்ந்தார். ஒருநாள் வழக்கம்போல் துயிலுணர்ந்து எழுந்து அண்ணாமலையானின் திருவருளைச் சிந்தித்தார். அந்தச் சிற்றஞ் சிறுகாலையில் பெண்கள் எழுந்திருந்து வீடுவாசல்களை மெழுகித் தூய்மை செய்து அழகழகாய்க் கோலங்கள் இட்டுப் பொய்கைக்கு நீராடப் போகிறார்கள். அவர்களில், சிறுமியர்கள்—மணமாகாத பெண்கள்—கூட்டமாகப் போவதையும் காண்கிறார் மாணிக்கவாசகர்.

இவர்கள் கலகலவென்று உரையாடுகிறார்கள்; பாடிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் போகிறார்கள். இக்கன்னியர் ஒருவரையொருவர் எழுப்புவதையும் பரிகசித்துக் சொள்வதையும், ஒருவர் மீது ஒருவர் சொல்லம்பு தொடுத்துப் பூசலிடுவதுபோல் விளையாடுவதையும் பார்க்கிறார்.

உறக்கத்திலிருந்து இப்பொழுதுதான் விழித்துக்கொண்டு கூட்டத்தில் கலந்து கொள்பவரையும் மணிவாசகர் காண்கிறார். வீதியில் இறைவனது புகழை இவர்கள் பாடுவது கேட்டுப் படுக்கையிலேயே மெய்ம்மறந்து பரவசமாகிக் கிடப்பவர்களையும் பார்க்கிறார். அவனருளே கண்ணாகக் காண்கிறார் இந்தக் காட்சிகளையெல்லாம்.

இக்கூட்டத்திலே, மகிழ்ச்சியால் விரிந்த கண்களையுடைய கன்னியரைக் காண்கிறார்; அலங்காரச் செல்வியரைப் பார்க்கிறார். அவர்கள் பேசுவதும் ஏசுவதுமாக விளையாடிக் கொண்டிருக்கும்போதே முத்துப் போல் வெண்ணகை புரியும் இப்பெண்களின் கள்ளங்கவடற்ற உள்ளத்தை அந்த நகைப்பின் வாயிலாகவே கண்டு கொள்கிறார். அவர்களுடைய அழகிலே சித்தத்தின் அழகையும் பார்க்கிறார்.

வண்ணக்கிளி மொழியாரைக் காண்கிறார். மான்விழியாரை, அவர்கள் மருண்டு பார்த்துக் கொண்டே குதூகலமாகத் துள்ளிச் செல்லும்போது, பார்க்கிறார். பாலும் தேனும்போல் தித்திக்கப் பேசும் அந்தப் பேச்சிலே சிவ பக்தியும் கலந்திருந்தால் இந்த மார்கழி நீராட்டம் எவ்வளவு சிறப்புடையதாகும்! பாவை நோன்பின் வரலாற்றை அறிந்

இருந்த மணிவாசகப் பெருமான், இருபது பாவைப் பாடல்களால் தம் திருவெம்பாவையைப் பாடிமுடிக்க விரும்புகிருர்.

## உதயமாகிறது திருவெம்பாவை

மார்கழித் திங்களில் ஆனந்தமான அதிகாலைவேளை. புள்ளினங்கள் பள்ளியெழுச்சி பாடி உதய சூரியனைத் துயிலெழுப்புகின்றன. வண்டினங்கள் மலர்களிடையே பண்பாடுகின்றன. கோயிலிலிருந்து இசைக் கருவிகளின் இசை, சங்கொலி, மணியோசை முதலான மங்கல ஒலிகள் எழுகின்றன. அண்ணாமலையானின் அருள் வெள்ளத்திலே சுழித் தெழுவது போன்ற இந்த அழகுகளை 'ஆயிரம் முகத்தால்' காண்பது போல் அனுபவிக்கிருர் மணிவாசகப் பெருமான்.

இந்த அனுபவத்திலே நமது பக்தமணியின் உள்ளம் பூரித்துப் போகிறது. இந்தப் பூரிப்பே பாவைப் பாட்டாக முழங்குகிறது. காலை ஒளியும், அந்த ஒளியில் தாம் காணும் அகக்காட்சி புறக்காட்சிகளும்,

ஆதியும் அந்தமும்
இல்லா அரும்பெருஞ் சோதியை

ப்பாடத் தூண்டுகின்றன. திருவெம்பாவை உதயமாகி விடுகிறது.

வீதிகள் வழியே சென்று, குறிப்பிட்ட வீடுகளில் தோழிமாரை எழுப்பிக்கொண்டு போகும் கன்னியர் கூட்டம் நம் கண்முன் தோன்று கிறது. பேச்சும் ஏச்சும், நகைப்பும் பரிகாசமும், இடித்துரைத்தலும், அன்பும், ஆரவாரமும் எல்லாம் தெய்வப் பாடல்களில் சங்கமித்து ஒரே ஞான கங்கையாகப் பொங்கி வருவதைக் காண்கிருேம். "கதவைத்திற; அல்லது வாயையாவது திற" என்ற குரல்கள் அங்குமிங்கும் கேட் கின்றன. "நீ நல்லவள், ஆனல் உன் உறக்கம் பொல்லாதது!" என்பது போன்ற குறும்புப் பேச்சொலிகளும் செயற்கைச் சிங்காரங்களுடனும் இயற்கையழகுகளுடனும் கொஞ்சிக் குலாவுகின்றன.

வீடு வாழ நாடு வாழ வேண்டும்; குடும்பத்தின் விரிவே ஊரும் நாடும், நாடு செழிக்க மழை பெய்யவேண்டும்; இல்லறம் நல்லறமாக நல்ல கணவரைக் கன்னியர் கல்யாணம் செய்து கொள்ளவேண்டும் என்ற பாவை நோன்பின் பழைய அடிப்படைக் கருத்துகளையும் குறிப் பாகவோ வெளிப்படையாகவோ கண்டு கொண்டே, நாமும் பொய்கைக் கரைக்கு வந்து சேர்கிருேம்.

## சுனை நீராடும் சுந்தரிகள்

தாமரைக்குளம், பூக்கள் நிறைந்து அகன்றதொரு நீர்நிலையாகக் காண்கிறது.

மொய்யார் தடம்பொய்கை
புக்கு முகேர் என்னக்
கையால் குடைந்து குடைந்து

நீராட விரும்பும் இளம் பெண்களைக் காண்கிறோம். இவர்கள் இறைவனைப் பிரார்த்தித்துக் கொண்டே நீராடப் போகிறார்கள்.

“இறைவனைப் புகழ்ந்து திருவடி ஏத்திச் சுனை நீராடுவோம்.” என்று பேசிக்கொள்கிறார்கள். இறைவனைத் “தீர்த்தன்” என்கிறார்கள். “நாம்...ஆடும் தீர்த்தன்” என்கிறார்கள். அதாவது, நாம் மகிழ்ச்சியுடன் ஆரவாரம் செய்து முழுகும் இந்தத் தூய நீர் போன்றவன் ஆண்டவன் என்கிறார்கள். உண்மையில், அவனே தீர்த்தம்; அவனிடம் கொள்ளும் பக்தி அல்லது “அன்பு நீராடல்” தான் இவர்களது முக்கிய நோக்கம். அந்தத் தூய அன்புநீராட்டத்திற்கு அறிகுறிதான் இந்தத் தூய நன்னீராட்டம், இந்தச் சுனை நீராடல்.

இப்பனி நீராட்டத்தின்போது இறைவனைத் “தீயாடும் கூத்தன்” என்று தம் அழகிய சித்தத்திலே சித்தரித்துக் கொள்கிறார்கள் பெண்கள். தில்லைச் சிற்றம்பலத்தில் தீயைக் கையில் ஏந்தி ஆடுகின்ற ஆனந்தக் கூத்தனின் நினைவோடு நீராடப் போகிறார்கள். வளைசிலம்ப, மேகலைகள் ஆரவாரம் செய்யப் பூம் பொய்கையிலே குதித்து அந்தச் சுனையிலுள்ள நன்னீரிலே ஆடுவோமாக என்று தீர்மானிக்கிறார்கள்.

பூம்பொய்கைக் கரையில் பூக்கள் திகழும் அழகிய கூந்தல் மீது வண்டுகள் ஆரவாரிக்க, நீராட்டத்திற்கு ஒரு சங்கற்பம் செய்து கொள்வதுபோல் பேசிக்கொள்ளும் பெண்களைப் பனிபெய்யும் காலை வேலையில் கண்ணாரக் காண்கிறோம். தீயாடும் கூத்தனின் சிந்தனையிலே பனிநீராட்டம் இவர்களுக்குப் பரமானந்தம் தான் என்ற குறிப்பையும் கண்டு கொள்கிறோம்.

அலைமோதும் பொய்கை அம்மையப்பனை நினைவூட்டுகிறது. கருங்குவளை மலர்களும் செந்தாமரைப் பூக்களும் இறைவனையும் இறைவியையும் நினைவூட்டுகின்றன. இறைவனது செந்நிறத்தையும் இறைவியின் வாய், கை, திருவடி ஆகிய அங்கங்களின் செந்நிறத்தையும் நினைவூட்டு

கின்றன இப்பொய்கையில் பூத்திருக்கும் செந்தாமரைப் பூக்கள், நீல கருங்குவளைமலர்கள் சிவபெருமானின் தியாக நினைவுக்குறியான நீல கண்டத்தை நினைவூட்டுவதுடன், அம்மையின் அருள் நிறைந்த அழகு கண்களையும் நினைவூட்டுகின்றன.

இத்தகைய சிந்தனைகளுடன் இப்பெண்கள் வளைகளும் பாதச் சிலம்பு களும் கொஞ்சி ஒலிக்க, உள்ளக்கிளர்ச்சியால் மார்பு பூரிக்க, "நாம் இந்தப் பூம்புனல் பொங்கப் பாய்ந்து நீராடுவோம்" என்று தாய்மொழி யாகிய இன்பத்தமிழிலேயே சங்கற்பம் செய்து கொள்கிறார்கள்.

## குளிருக்கு மருந்து

நீராடும்போது காதணிகளும் மற்ற ஆபரணங்களும் அசைந்தாடும், நீண்ட கூந்தல் அவிழ்ந்து ஆடும், வண்டுகள் கூட்டம் எழுந்து ஆடும்—என்றெல்லாம் விளையாட்டாக வருணிக்கிறாள் ஒருத்தி. இந்த ஆட்டங் களிலிருந்து வேறொரு ஆட்டத்திற்கு, அதாவது பிரபஞ்ச ரகசியமான ஆனந்தத் தனிப்பெருங் கூத்தாட்டத்திற்குப் பாய்ந்து செல்லுகிறது இவள் நினைவு. அத்தச் சிவ நடனத்தைப் பாடிக்கொண்டே குளிர்புனலில் இறங்கி விடுவோம், குளிர் தெரியாது—என்று சாதுரியமாய்ப் பேசுவதும் நம் காதில் விழுகிறது.

அப்பனை ஆனந்தக் கூத்தனையும் தாய்க்குலத்தின் பிரதிநிதியான உமையம்மையையும் பாடிக்கொண்டே பனி நீராடினால் குளிர் மட்டுமா போகும்? உலக வாழ்க்கையில் உள்ள நடுக்கங்களும் போய்விடும் என்ற தத்துவப் பேருண்மையும் இவர்களது குதூகலத்துடனும் விளையாட்டு டனும் கொஞ்சிக் கலந்து குலாவி வந்து நம் செவியில் விழுகிறது; நம் உள்ளமும் உணர்வும் ஒருங்கே குளிர்ந்து பக்திப் பேரின்பத்தில் முங்கி முங்கி எழுகின்றன.

பெண்கள் பாய்ந்து நீராடும்போது பொய்கை எப்படிப் பொங்கு கிறதோ அப்படிப் பொங்குகிறது நம் மனோபாவமும். சிந்தனைகள் ஒன்றுக் கொன்று உச்சமாக அலைமேல் அலையெறிந்து வருகின்றன, நம் உள்ளத் திலும். நமக்கும் உள்ளக் குளிராகிய நடுக்கம்-கவலைகளுக்கு ஓர் அ மருந்தைக் கண்டு கொண்டது போன்ற உணர்ச்சி ஏற்படுகிறது. ந இதயமும் பனிநீராடிப் பரவசமாகிறது.

கின்றன. இப்பொய்கையில் பூத்திருக்கும் செந்தாமரைப் பூக்கள், நீலக் கருங்குவளை மலர்கள் சிவபெருமானின் தியாக நினைவுக்குறியான நீல கண்டத்தை நினைவூட்டுவதுடன், அம்மையின் அருள் நிறைந்த அழகுக் கண்களையும் நினைவூட்டுகின்றன.

இத்தகைய சிந்தனைகளுடன் இப்பெண்கள் வளைகளும் பாதச் சிலம்புகளும் கொஞ்சி ஒலிக்க, உள்ளக்கிளர்ச்சியால் மார்பு பூரிக்க, "நாம் இந்தப் பூம்புனல் பொங்கப் பாய்ந்து நீராடுவோம்" என்று தாய்மொழியாகிய இன்பத்தமிழிலேயே சங்கற்பம் செய்து கொள்கிறார்கள்.

## குளிருக்கு மருந்து

நீராடும்போது காதணிகளும் மற்ற ஆபரணங்களும் அசைந்தாடும், நீண்ட கூந்தல் அவிழ்ந்து ஆடும், வண்டுகள் கூட்டம் எழுந்து ஆடும்— என்றெல்லாம் விளையாட்டாக வருணிக்கிறாள் ஒருத்தி. இந்த ஆட்டங்களிலிருந்து வேறொரு ஆட்டத்திற்கு, அதாவது பிரபஞ்ச ரகசியமான ஆனந்தத் தனிப்பெருங் கூத்தாட்டத்திற்குப் பாய்ந்து செல்லுகிறது இவள் நினைவு. அத்தச் சிவ நடனத்தைப் பாடிக்கொண்டே குளிர்புனலில் இறங்கி விடுவோம், குளிர் தெரியாது—என்று சாதுரியமாய்ப் பேசுவதும் நம் காதில் விழுகிறது.

அப்பனை ஆனந்தக் கூத்தனையும் தாய்க்குலத்தின் பிரதிநிதியான உமையம்மையையும் பாடிக்கொண்டே பனி நீராடினால் குளிர் மட்டுமா போகும்? உலக வாழ்க்கையில் உள்ள நடுக்கங்களும் போய்விடும் என்ற தத்துவப் பேருண்மையும் இவர்களது குதூகலத்துடனும் விளையாட்டுடனும் கொஞ்சிக் கலந்து குலாவி வந்து நம் செவியில் விழுகிறது; நம் உள்ளமும் உணர்வும் ஒருங்கே குளிர்ந்து பக்திப் பேரின்பத்தில் முங்கி முங்கி எழுகின்றன.

பெண்கள் பாய்ந்து நீராடும்போது பொய்கை எப்படிப் பொங்குகிறதோ அப்படிப் பொங்குகிறது நம் மனோபாவமும். சிந்தனைகள் ஒன்றுக்கொன்று உச்சமாக அலைமேல் அலையெறிந்து வருகின்றன, நம் உள்ளத்திலும். நமக்கும் உள்ளக் குளிராகிய நடுக்கம்-கவலைகளுக்கு ஓர் அருமருந்தைக் கண்டு கொண்டது போன்ற உணர்ச்சி ஏற்படுகிறது. நம் இதயமும் பனிநீராடிப் பரவசமாகிறது.

# அற்புதமான சொற்சித்திரங்கள்

பொய்கையும் நீராடலும், நோன்பு நோற்கும் கன்னிப் பெண்களும், இந்த மணிவாசகப் பகுதியிலே, இனிமையும் அழகும் பக்திச் சுவையும் சொட்டச் சொட்டக் கவிச் சித்திரங்களாவதைக் காண்கிறோம்.

மாணிக்கவாசகரின் மழைப் பாட்டும் ஓர் அற்புதமான சப்த சித்திரம், மேகம், மின்னல், இடி, வானவில், மழை எல்லாம் உலக அன்னையாகிய பராசக்தியை நினைவூட்டுகின்றன, அம்மையப்பனின் அடியவர்களுக்கு. கருக்கொண்ட மேகங்கள் தெற்குமுகமாய் ஓடிவருவது கண்டு பெண்கள், "மழையே! மழையே! ஓடிவா; எங்களம்மையின் அருள் போல் பொழிந்து நாட்டையும் வீட்டையும் வாழ்விப்பாய்" என்கிறார்கள்.

"தேவியின் இடைபோல் மின்னிக்கொண்டு வா!" என்கிறார்கள். கண்ணைப் பறிக்கும் மின்னலுக்குப் பின்காதில் விழும் கோடையிடியும் இவர்களைப் பயமுறுத்தவில்லை. தாயின் கொலுசு பாதசரங்கள் ஒலி செய்யும்போது குழந்தைகள் மகிழ்ச்சி அடைவதில்லையா? அப்படி மகிழ்ந்து போகிறார்கள் இவர்களும்.

மேகத்திடையே எவ்வளவு வசிகரமாகக் கிடக்கிறது வானவில்! "சரி, சரி; அதோ தெரிகிறதே தேவியின் அழகிய புருவம்!" என்று பூரித்துப் போகிறார்கள். தாயின் கருணையே மழையாக இறங்கி வந்து சுனைநீராகப் பொங்கி இவர்களை "நீராட வாருங்கள், நீராட வாருங்கள்" என்று வரவேற்பதாக இப்பெண்கள் உணர்ந்து பூம்புனலாடுகிறார்கள். நம்மை மாசு களைந்து சீராட்டுகிறான் இறைவன் என்ற நினைப்புடன் பூம்புனல் பாய்ந்து பாய்ந்து ஆடுகிறார்கள்.

புனலாடும் பாவையர், அத்தப் பனி நீராட்டத்திலே அம்மையப்பனின் அருளையும் அழகையும் கண்டு களித்ததுபோல் நாமும் இந்தக் கவிச் சித்திரங்களிலே கவிதா தேவியின் அழகையும், அருளையும் பார்த்துப் பார்த்துப் பூரித்துப் போகிறோம்.

## 1

'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும், வாள்—தடங்கண்
மாதே! வளருதியோ? வன்செவியோ நின்செவிதான்?'
'மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே, விம்மி விம்மி, மெய்ம்மறந்து,
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்(டு),இங்ஙன்
ஏதேனும் ஆகாள், கிடந்தாள்; என்னே! என்னே!
ஈதேஎம் தோழி பரிசு' ஏலோர் எம்பாவாய்.

## 2

'பாசம் பரஞ்சோதிக்(கு) என்பாய், இராப்பகல்நாம்
பேசும்போ(து); எப்போ(து)இப் போதார் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ? நேரிழையாய்!' 'நேரிழையீர்!
சீ! சீ! இவையும் சிலவோ?'—'விளையாடி
ஏசும் இடம்ஈதோ? விண்ணோர்கள் ஏத்துதற்குக்
கூசும் மலர்ப்பாதம் தந்தருள வந்தருளும்
தேசன், சிவலோகன், தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க்(கு) அன்(பு) ஆர்? யாம் ஆர்?' ஏலோர் எம்பாவாய்.

## 3

'முத்தன்ன வெண்ணகையாய்! முன்வந்(து) எதிர் எழுந்(து), "என்
அத்தன்! ஆனந்தன்! அமுதன்!" என்(று) அள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய்; வந்(து) உன் கடைதிறவாய்!'
'பத்துடையீர்! ஈசன் பழஅடியீர்! பாங்குடையீர்!
புத்தடியோம் புன்மைதீர்த்(து) ஆட்கொண்டால் பொல்லாதோ?'
'எத்தோநின் அன்புடைமை? எல்லோம் அறியோமோ?'
'சித்தம் அழகியார் பாடாரோ நம்சிவனை?'
'இத்தனையும் வேண்டும் எமக்கு' ஏலோர் எம்பாவாய்.

## 4

‘ஒண்ணித் திலநகையாய்! இன்னம் புலர்ந்தின்றே?’
‘வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ?’
‘எண்ணிக் கொ(டு) உள்ளவா சொல்லுகோம்; அவ்வளவும்
கண்ணைத் துயின்(று) அவமே காலத்தைப் போக்காதே!’
‘விண்ணுக்(கு) ஒரு மருந்தை, வேத விழுப்பொருளை,
கண்ணுக்(கு) இனியானைப் பாடிக் கசிந்(து), உள்ளம்
உள்நெக்கு நின்(று) உருக, யாம் மாட்டோம்; நீயே வந்(து)
எண்ணிக் குறையில் துயில்!’ ஏலோர் எம்பாவாய்.

## 5

‘மால்அறியா, நான்முகனும் காணா, மலையினை “நாம்
போல்அறிவோம்!” என்(று) உள்ள பொக்கங்களே பேசும்
பால்ஊறு தேன்வாய்ப் படிறீ! கடைதிறவாய்’;
‘ஞாலமே, விண்ணே, பிறவே, அறிவரியான்
கோலமும், நம்மைஆட் கொண்டருளிக் கோதாட்டும்
சீலமும் பாடிச் “சிவனே! சிவனே!” என்(று)
ஓலம் இடினும் உணராய், உணராய்காண்!
ஏலக் குழலி பரி(சு)!’ ஏலோர் எம்பாவாய்.

## 6

‘மானே! நீ நென்னலை, “நாளை வந்(து) உங்களை
நானே எழுப்புவன்” என்றலும், நாணுமே
போன திசை பகராய்! இன்னம் புலர்ந்தின்றே?
வானே, நிலனே, பிறவே, அறிவரியான்
தானே வந்(து), எம்மைத் தலையளித்(து) ஆட்கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்(கு), உன்வாய் திறவாய்;
ஊனே உருகாய்; உனக்கே உறும்! எமக்கும்
ஏனோர்க்கும் தம்கோனைப் பா(டு)’ ஏலோர் எம்பாவாய்.

## 7

'அன்னே! இவையும் சிலவோ? பல அமரர்
உன்னற்(கு) அரியான், ஒருவன், இருஞ்சீரான்
சின்னங்கள் கேட்பச் "சிவன்" என்றே வாய்திறப்பாய்;
"தென்ன" என்னாமுன்னம் தீசேர் மெழு(கு) ஒப்பாய்;
"என்னானை, என் அரையன், இன்னமு(து)" என்(று) எல்லோரு
சொன்னோம்கேள், வெவ்வேறாய்; இன்னம் துயிலுதியோ?
வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்;
என்னே துயிலின் பரிசு!' ஏலோர் எம்பாவாய்.

## 8

'கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்;
ஏழில் இயம்ப, இயம்பும்வெண் சங்கெங்கும்;
கேழில் பரஞ்சோதி, கேழில் பரங்கருணை,
கேழில் விழுப்பொருள்கள் பாடினோம்; கேட்டிலையோ?
வாழி ஈ(து) என்ன உறக்கமோ? வாய்திறவாய்;
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ?
ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை,
ஏழை பங்காளனையே பாடு' ஏலோர் எம்பாவாய்,

## 9

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே!
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே!
உன்னைப் பிரானாகப் பெற்ற உன் சீரடியோம்
உன்அடியார் தாள்பணிவோம்; ஆங்கவர்க்கே பாங்காவோம்;
அன்னவரே எம்கணவர் ஆவார்; அவர்உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்;
இன்ன வகையே எமக்(கு)எம்கோன்! நல்குதியேல்,
என்ன குறையும் இலோம் ஏலோர் எம்பாவாய்.

## 10

பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்;
போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே!
பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன்;
வேதமுதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும்,
ஓத உலவா ஒருதோழன்; தொண்டர் உளன்;
கோதில் குலத்(து) அரன்-தன் கோயில் பிணாப்பிள்ளைகாள்!
ஏதவன் ஊர்! ஏதவன்பேர்? ஆர் உற்றார்? ஆர் அயலார்?
ஏதவனைப் பாடும் பரி(சு)? ஏலோர் எம்பாவாய்.

## 11

மொய்யார் தடம்பொய்கை புக்கு, முகேர்என்னக்
கையால் குடைந்து குடைந்(து), உன் கழல்பாடி,
ஐயா! வழிஅடியோம் வாழ்ந்தோம்காண்; ஆரழல்போல்
செய்யா! வெண் ணீருடி! செல்வா! சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா!
ஐயா நீ ஆட்கொண் டருளும் விளையாட்டின்,
உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்;
எய்யாமல் காப்பாய் எமைஏலோர் எம்பாவாய்.

## 12

ஆர்த்த பிறவித் துயர்கெட, நாம் ஆர்த்தாடும்
தீர்த்தன், நற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடும்
கூத்தன், இவ் வானும் குவலயமும் எல்லோமும்
காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி,
வார்த்தையும் பேசி, வளைசிலம்ப, வார்கலைகள்
ஆர்ப்பரவஞ் செய்ய, அணிகுழல்மேல் வண்டார்ப்ப,
பூத்திகழும் பொய்கை குடைந்(து), உடையான் பொற்பாதம்
ஏத்தி, இருஞ்சுனைநீர் ஆ(டு)ஏலோர் எம்பாவாய்.

## 13

பைங்குவளைக் கார்மலரால், செங்கமலப் பைம்போதால்
அங்கம் குருகினத்தால், பின்னும் அரவத்தால்,
தங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்,
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்(று) இசைந்து
பொங்கு மடுவில் புகப்பாய்ந்து பாய்ந்து, நம்
சங்கம் சிலம்பிச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந்(து) ஆடேலோர் எம்பாவாய்.

## 14

காதார் குழையாட, பைம்பூண் கலனாட,
கோதை குழலாட, வண்டின் குழாமாட,
சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி,
வேதப் பொருள்பாடி, அப்பொருளா மாபாடி,
சோதி திறம்பாடி, சூழ்கொன்றைத் தார்பாடி,
ஆதி திறம்பாடி, அந்தமா மாபாடி,
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி ஆ(டே)லோர் எம்பாவாய்.

## 15

ஓர் ஒருகால் 'எம்பெருமான்' என்றென்றே, நம்பெருமான்
சீர்ஒருகால் வாய்ஓவாள், சித்தம் களிகூர,
நீர் ஒருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்ப,
பார் ஒருகால் வந்தனையாள், விண்ணோரைத் தான்பணியாள்
பேரரையற்(கு) இங்ஙனே பித்தொருவர் ஆமாறும்
ஆர்ஒருவர்? இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தாள்,
வார்உருவப் பூண்முலையீர்! வாயார நாம்பாடி,
ஏர்உருவப் பூம்புனல்பாய்ந்(து) ஆடேலோர் எம்பாவாய்.

## 16

முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்(து), உடையாள்
என்னத் திகழந்(து), எம்மைஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்(து),எம் பிராட்டி திருவடிமேல்
பொன்னஞ் சிலம்பில் சிலம்பி. திருப்புருவம்
என்னச் சிலைகுலவி, நந்தம்மை ஆளுடையாள்
தன்னில் பிரிவிலா எம்கோமான் அன்பர்க்கு
முன்னி, அவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழை!ஏலோர் எம்பாவாய்.

## 17

செங்கண் - அவன்பால், திசைமுகன்பால், தேவர்கள்பால்,
எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதா,
கொங்குண் கருங்குழலி! நந்தம்மைக் கோதாட்டி,
இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை,
அங்கண் அரசை, அடியோங்கட்(கு) ஆரமுதை,
நங்கள் பெருமானைப் பாடி நலம்திகழப்
பங்கயப் பூம்புனல்பாய்ந்(து) ஆடேலோர் எம்பாவாய்.

## 18

அண்ணா மலையான் அடிக்கமலம் சென்(று) இறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகைவீறு அற்றாற்போல்,
கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்ப,
தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள்—தாம்அகலப்
பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி, மண்ணாகி, இத்தனையும் வேறாகி,
கண்ணார் அமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணே! இப் பூம்புனல்பாய்ந்(து) ஆடேலோர் எம்பாவாய்!

## 19

'உங்கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம்' [என்[று]
அங்[கு]அப் பழஞ்சொல் புதுக்கும்எம் அச்சத்தால்,
எங்கள்பெருமான்! உனக்[கு] ஒன்[று] உரைப்போம், கேள்:
எம்கொங்கை நின்அன்ப ரல்லார்தோள் சேரற்க;
எம்கை உனக்கல்லா[து] எப்பணியும் செய்யற்க;
கங்குல் பகல்எம்கண் மற்றொன்றும் காணற்க;
இங்கிப் பரிசே எமக்[கு]எம்கோன்! நல்குதியேல்,
எங்[கு]எழில்என், ஞாயி[று] எமக்கு? ஏலோர் எம்பாவாய்.

## 20

போற்றி அருளுக, நின் ஆதியாம் பாத மலர்;
போற்றி அருளுக, நின் அந்தமாம் செந்தளிர்கள்;
போற்றி! எல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்;
போற்றி! எல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்;
போற்றி! எல்லா உயிர்க்கும் ஈறாம் இணையடிகள்;
போற்றி! மால் நான்முகனும் காணாத புண்டரிகம்;
போற்றி! யாம் உய்யஆட் கொண்டருளும் பொன்மலர்கள்;
போற்றி! யாம் மார்கழிநீ ரா(டு) ஏலோர் எம்பாவாய்

# திருப்பள்ளி எழுச்சி

1

போற்றி! என்வாழ்முதல் ஆகிய பொருளே!
புலர்ந்தது; பூங் கழற்கு இணைதுணை மலர்கொண்டு
ஏற்றி, நின்திருமுகத்து எமக்குஅருள் மலரும்
எழில்நகை கண்டுநின் திருவடி தொழுகோம்.
சேற்றிதழ்க் கமலங்கள் மலரும்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறைஉறை சிவபெருமானே!
ஏற்றுஉயர் கொடிஉடையாய்! எமை உடையாய்!
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே!

2

அருணன், இந்திரன்திசை அணுகினன்; இருள்போய்
அகன்றது; உதயம் நின்மலர்த் திருமுகத்தின்
கருணையின் சூரியன் எழ-எழ, நயனக்
கடிமலர் மலர, மற்றுஅண்ணல் அங்கண்ணும்
திரள்நிரை அறுபதம் முரல்வன; இவைஓர்,—
திருப்பெருந்துறை உறை சிவபெருமானே!
அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே!
அலைகடலே! பள்ளி எழுந்தருளாயே!

3

கூவின பூங்குயில்: கூவின கோழி:
குருகுகள் இயம்பின: இயம்பின சங்கம்:
ஓவின தாரகைஒளி: ஒளி உதயத்து
ஒருப்படுகின்றது விருப்பொடு, நமக்கு.—
தேவ! நற்செறி கழல்தாளிணைகாட்டாய்!
திருப் பெருந்துறை உறை சிவபெருமானே!
யாவரும் அறிவரிறியாய்! எமக்கு எளியாய்!
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே!

இன்னிசை வீணையர், யாழினர். ஒருபால்;
இருக்கொடு தோத்திரம் இயம்பினர், ஒருபால்:
துன்னிய பிணைமலர்க் கையினர், ஒருபால்;
தொழுகையர், அழுகையர், துவள்கையர், ஒருபால்
சென்னியில் அஞ்சலி கூப்பினர், ஒருபால்.—
திருப்பெருந்துறை உறை சிவபெரு மானே!
என்னையும் ஆண்டுகொண்டு, இன்னருள் புரியும்
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே!

## 5

'பூதங்கள் தோறும் நின்றாய்'எனின், அல்லால்,
போக்கிலன், வரவிலன்.' என,நினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல், ஆடுதல், அல்லால்,
கேட்டு அறியோம், உனைக்கண்டு அறிவாரை.—
சீதம்கொள் வயல்திருப்பெருந்துறை மன்னா!
சிந்தனைக்கும் அரியாய்! எங்கள் முன்வந்து.
ஏதங்கள் அறுத்து, எம்மைஆண்டு, அருள்புரியும்
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே!

## 6

பப்பஅற வீட்டிருந்து உணரும்நின் அடியார்,
பந்தனைவந்து அறுத்தார்;—அவர் பலரும்,
மைப்புறு கண்ணியர், மானிடத்து இயல்பின்
வணங்குகின்றார்.—அணங்கின் மணவாளா!
செப்புஉறு கமலங்கள் மலரும்தண் வயல்சூழ்
திருப்பெருந்துறை உறை சிவபெருமானே!
இப்பிறப்பு அறுத்து, எமைஆண்டு, அருள்புரியும்
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே!

7

அது,பழச் சுவைஎன, அமுதென; அறிதற்கு
அரிதென, எளிதென; அமரரும் அறியார்.
இது,அவன் திருவுரு; இவன்,அவன்; எனவே
எங்களை ஆண்டுகொண்டு, இங்கு எழுந்தருளும்,
மதுவளர் பொழில் திருஉத்தரகோச—
மங்கை உள்ளாய்! திருப்பெருந்துறை மன்னு!
எதுஎமைப் பணிகொளும் ஆறு?அது கேட்போம்:
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே!

8

முந்தியமுதல், நடு, இறுதியும், ஆனாய்;
மூவரும். அறிகிலர்: யாவர்மற்று அறிவார்?—
பந்துஅணை விரலியும், நீயும்,நின் அடியார்
பழங்குடில் தொறும் எழுந்தருளிய பரனே!
செம்தழல் புரை திருமேனியும் காட்டி,
திருப்பெருந்துறை உறை கோயிலும் காட்டி,
அந்தணன் ஆவதும்காட்டி, வந்து ஆண்டாய்!
ஆரமுதே! பள்ளி எழுந்தருளாயே!

9

விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா
விழுப் பொருளே! உனதொழும்பு அடியோங்கள்,
மண்ணகத்தே வந்து, வாழச் செய்தானே!
வண் திருப் பெருந்துறையாய்! வழி அடியோம்
கண் அகத்தே நின்று, களிதரு தேனே!
கடல் அமுதே! கரும்பே! விரும்பு அடியார்
எண் அகத்தாய்! உலகுக்கு உயிர் ஆனாய்!
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே!

'புவனியில் போய்ப் பிறவாமையின், நாள்நாம்
போக்குகின்றோம் அவமே; இந்தப்பூமி,
சிவன் உய்யக் கொள்கின்ற ஆறு'என்று நோக்கி,
திருப்பெருந்துறை உறைவாய்! திருமால்ஆம்
அவன்விருப்பு எய்தவும், அலரவன் ஆசைப்
படவும், நின்அலர்ந்த மெய்க் கருணையும் நீயும்,
அவனியில் புகுந்து, எமைஆட்கொள்ள வல்லாய்!
ஆரமுதே! பள்ளி எழுந்தருளாயே!





# 1

‘ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும், வாள்—தடங்கண்
மாதே! வளருதியோ? வன்செவியோ நின்செவிதான்?’
‘மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே, விம்மி விம்மி, மெய்ம்மறந்து,
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்(டு),இங்ஙன்
ஏதேனும் ஆகாள், கிடந்தாள்; என்னே! என்னே!
ஈதேஎம் தோழி பரிசு’ ஏலோர் எம்பாவாய்.

## பதவுரை

'வாள்-தடங்கண் மாதே! = ஒளிரும் அகன்ற கண்களையுடைய பெண்ணே!

ஆதியும் அந்தமும் இல்லா = தோற்றமும் முடிவும் இல்லாத

அரும்பெருஞ் சோதியை = அரிய பெரிய சோதியாக உள்ள [இறைவனை

யாம் பாட = நாங்கள் பாட,

கேட்டேயும் = (அதைக்) கேட்டும்,

வளருதியோ = கண் வளர்கிறாயோ? (உறங்குகிறாயோ?)

வன் செவியோ நின் செவிதான்? = உன்னுடைய செவி செவிடு பட்டதோ?

[இப்படி ஒருத்தி கேட்க, மற்றொருத்தி கூறுவாள்:]

'மாதேவன் வார்கழல்கள் = மகாதேவனான சிவபெருமானுடைய நீண்ட வீரக்கழல் அணிந்த (அல்லது சிலம்பு அணிந்த) திருவடிகளை

வாழ்த்திய வாழ்த்து-ஒலி = (நாங்கள்) வாழ்த்திப் பாடிய பாடல்களின் ஓசை

போய் = போய்,

வீதிவாய் = வீதியில்

கேட்டலுமே = கேட்டவுடனே

விம்மி விம்மி = (பக்தியால்) விம்மி விம்மி (அழுது)

மெய்ம் மறந்து = உடம்பை மறந்தவளாய் (தன்வசம் இழந்தவளாய்),

போது ஆர் = மலர்கள் நிறைந்த (பூக்கள் பொருந்திய)

அமளியின் மேல் நின்றும் புரண்டு = படுக்கை மேலிருந்து புரண்டும்

இங்ஙன் = இங்ஙனமாக (இவ்விதமாக)

ஏதேனும் ஆகாள் கிடந்தாள்' = வேறு எந்தச் செயலுக்கும் உதவாதவளாய்க் கிடக்கலுற்றாள். (கதவைத் திறப்பதற்கும் பதில் சொல்வதற்கும் கூட இயலாதவளாய்க் கிடந்தாள்.)

[தாயோ, பணிப்பெண்ணோ கதவைத் திறந்திருக்கலாம் என்பது குறிப்பு.]

என்னே! என்னே! } என்ன அதிசயம்!
ஈதே எம்தோழி பரிசு } இதுவே எமது தோழியின் தன்மை.

## தெளிவுரை

'ஆதியும் அந்தமும் இல்லாத அரும்பெருஞ் சோதியை நாங்கள் பாட நீ கேட்டும், ஒளி பொருந்திய அகன்ற கண்களையுடைய பெண்ணே! இன்னமும் உறங்குகிருயோ?' என்று கூட்டத்தில் ஒரு பெண் கேட்கத் தொடங்குகிருள்.

'நாங்கள் பல பேராகச் சேர்ந்து பாடிக்கொண்டு வந்தும் இந்தப் பேரொலி உன் செவிகளில் விழவில்லையா? அப்படியானல் நீ செவிடா?' என்று அவளே தொடர்ந்து கேட்கிருள்.

கன்னியர்கள் இப்பொழுது இந்த வீட்டு வாசலில் வந்து நிற்கிருர்கள். இந்த நிலையில் மற்ருெருத்தி கூறுகிருள்: 'மகாதேவனுடைய திருவடிகளை நாங்கள் வாயார வாழ்த்திய வாழ்த்தொலிப் பாடல்கள் தெருக்கோடியிலிருந்து கேட்டதுமே, இவள் விம்மி விம்மி மெய்ம்மறந்து பஞ்சணையிலிருந்து புரண்டு கீழே விழுந்திருக்கிருள். வேறு எச் செயலுக்கும் உதவாதவளாகக் கிடக்கிருள்; அதனுல்தான் பதிலும் சொல்லவில்லை. எங்கள் மனத்திற்கினிய இத் தோழியின் தன்மை இது. என்னே!என்னே!'

### குறிப்புரை

பெண்களின் கூட்டம் வீட்டு வாசலில் வந்து நின்றதும், வீட்டுக்குள் இருப்பவளின் தாயோ, ஒரு பணிப் பெண்ணோ, வந்து கதவைத் திறந்திருக்கலாம் என்றும், கூட்டத்தின் பிரதிநிதிகளாகப் பேசும் இரண்டு பெண்கள் உள்ளே வந்து பார்க்கிருர்கள் என்றும் ஊகஞ் செய்வது பொருந்தும்.

### வேறு குறிப்புகள்

இத் திருவெம்பாவையை மாணிக்கவாசகர் திருவண்ணுமலையில் பாடியதாகத் திருவாதவூரடிகள் புராணம் தெரிவிக்கிறது. முதற் பாட்டின் தொடக்கமே, திருவாதவூரடிகள் புராணம் கூறுவதற்கு ஓர் ஆதாரம்போல் அமைந்திருக்கிறது.

திருமாலும் பிரமனும் அறிய இயலாத பெருஞ்சோதி சிவபெருமான் என்ற புராணக்கதை திருவண்ணுமலையில் நிகழ்ந்தது என்பது பிரசித்தம். இங்கே குறிப்பாக வரும் இப்புராண நிகழ்ச்சி,

திருவெம்பாவையினிடையே 5-ஆம் திருப்பாட்டின் தொடக்கத்தில் வெளிப்படையாகக் கூறப்படுவதையும் காணலாம்.

### பாட்டின் அமைப்பு

பாவை நோன்பு என்ற விரதத்தை மேற்கொண்ட கன்னியர் சிலர் அதிகாலையில் துயிலுணர்ந்து எழுந்து நீராடப் போகிறார்கள். இந்த நோன்பை மேற்கொண்ட வேறொரு பெண் நீராட உடன் வருவதாக ஏற்கெனவே சொல்லியிருந்தாள். ஆனால் இவள் உரிய நேரத்தில் எழுந்து வரவில்லை. இவளை அவர்கள் துயிலுணர்த்துவதாக அமைந்திருக்கிறது பாட்டு.

### கண்ணழகு வாய்ந்த கன்னி

இத் தோழியை அவர்கள் 'வாள்—தடங்கண் மாதே!' என்று வாய்குளிர அகம்குளிர அழைக்கிறார்கள். அவர்களில் ஒருத்தி 'பெண்ணே!' நீ கண் வளர்கிறாயோ? என்றுதான் கேட்க எண்ணினாள்; ஆனால் 'வாள்—தடங்கண்மாதே! வளருதியோ?' என்று கேட்பதன் நயத்தை நாம் உணர்ந்து கொள்ளவேண்டும்.

இங்கே கண்ணுக்கு உரிய அடைமொழி கவனிக்கத் தக்கது. உன் கண்ணழகும் கண்ணொளியும் புலப்பட இந்த வைகறைப் பொழுதில் விழித்துக்கொண்டு எங்களைக் குளிர நோக்கிய வண்ணம் எங்களுடன் கலந்து கொள்ளவேண்டிய நீ, இத்தகைய கண்களை மூடிக்கொண்டு கிடப்பது தகுதியன்று என்பதும் குறிப்பு. **கேட்டேயும்**=கேட்டும்; இசை நிறையாக வருகிறது ஏகாரம்.

**வன்செவி**=உணர்ச்சியற்ற செவி. உணர்ச்சியுள்ள செவி ஓசைகளைப் பற்றிக்கொள்ளும். செவிட்டுக்காது 'வன்செவி.'

இப்படிக் கன்னியர்களில் ஒருத்தி பரிகசிக்கும் போதே, 'உறக்கமும் அன்று, செவிடும் அன்று, எங்களுடன் நீராட வருவதில் விருப்பமின்மை காரணமோ?' என்ற குறிப்பையும் காண்கிறோம்.





## 2

'பாசம் பரஞ்சோதிக்(கு) என்பாய், இராப்பகல்நாம்

பேசும்போ(து); எப்போ(து)இப் போதார் அமளிக்கே

நேசமும் வைத்தனையோ? நேரிழையாய்!' 'நேரிழையீர்!

சீ! சி! இவையும் சிலவோ?'—'விளையாடி

ஏசும் இடம்ஈதோ? விண்ணோர்கள் ஏத்துதற்குக்

கூசும் மலர்ப்பாதம் தந்தருள வந்தருளும்

தேசன், சிவலோகன், தில்லைச்சிற் றம்பலத்துள்

ஈசனார்க்(கு) அன்(பு) ஆர்? யாம் ஆர்?' ஏலோர் எம்பாவாய்.

| | |
|---|---|
| 'நேரிழையாய்! | = தகுதியான அணிகளை அணிந்திருக்கும் பெண்ணே! |
| இராப்பகல் நாம் பேசும் போது | = இரவும் பகலும் நாம் பேசும் போதெல்லாம் |
| பாசம் பரஞ்சோதிக்கு என்பாய்; | = நீ "என்னுடைய பாசமெல்லாம் பரஞ்சோதிக்கே உரியது" என்று கூறுவாய்; |
| இப்போது ஆர் அமளிக்கே | = இந்தப் பூம்படுக்கைக்கே |
| எப்போது நேசமும் வைத்தனையோ? | = நீ எப்போது நேசமும் வைத்தாயோ?' |

[என்று கூட்டத்தில் ஒருத்தி உள்ளே வந்து நகையாடிக் கேட்க, இவளும் பரிகாசமாக,]

| | |
|---|---|
| 'நேரிழையீர்! | = 'தகுதியான அணிகளை அணிந்திருக்கும் பெண்களே! |
| சீ! சி! இவையும் சிலவோ?' | = சீச்சீ! இப்படிப் பரிகசித்துச் சொல்லும் சொற்களும் (உங்கள் வாக்கில்) சில உள்ளனவோ? (அதிகமாக இல்லை போலும்!)' |

[என்று கூட்டத்தில் உள்ள கன்னியர்களை எல்லாம் முன்னிலைப்படுத்திப் பேசினாள். வேறொருத்தியும் உள்ளே வந்து குறுக்கிட்டுப் பேசுவாளாயினள்.]

| | |
|---|---|
| 'விளையாடி ஏசும் இடம் ஈதோ? | = 'நீங்கள் விளையாடி ஏசிக் கொள்ளும் இடம் இதுதானோ? |
| விண்ணோர்கள் ஏத்துதற்குக் கூசும் | = தேவர்கள் வணங்கக் கூசுகின்ற |
| மலர்ப்பாதம் தந்தருள வந்தருளும் | = அடிமலர்களைத் தருவதற்கு வந்தருளுகிற |
| தேசன் | = தேஜஸ் அல்லது ஒளியை உடையவனும் |
| சிவலோகன் | = சிவலோகநாதனும் |
| தில்லைச் சிற்றம்பலத்துள் ஈசனார்க்கு | = தில்லைச் சிற்றம்பலத்து நடுவே கூத்தாடுபவனுமாகிய ஈசனுக்கு |
| அன்பு ஆர்? யாம் ஆர்? | = அன்பு எத்தகையது? நாம் எத்தகைய நிலையில் இருக்கிறோம்?' |

## தெளிவுரை

கூட்டத்தின் பிரதிநிதியாக ஒரு பெண் உள்ளே வந்து பேசத் தொடங்குகிருள். ‘நேரிழையே! “பரஞ்சோதிக்குத்தான் என் பாசம் எல்லாம்” என்று நீ கூறுவது உண்டல்லவா? ஆனல் இப்பூம் படுக்கைமீது எப்போதுதான்நேசம் வைத்தாயோ?’

இப்பரிகாசக் கேள்விக்குப் பதில் சொல்லுகிருள் உள்ளேயிருப்பவள், படுக்கையிலே உட்கார்ந்த நிலையில். ‘சீச்சீ! இவ்வளவுதான் பேசத்தெரியுமா உங்களுக்கு? இன்னமும்கூடப் பேசத் தெரியுமோ?’ எனபது இவள் தொடுக்கும் பரிகாச எதிரம்பு.

இந்தப் பரிகாச உரையாடலை இப்படியே தடுத்து நிறுத்த விரும்புகிருள் மூன்ருமவள். இவளும் வந்து, “என்ன? இப்படி வீண் பேச்சுப் பேசத் தொடங்கிவிட்டீர்கள்! விளையாடுவதற்கும் ஏசிக் கொள்வதற்கும் உரிய இடமா, காலமா, இது? விண்ணோர்களும் ஏத்துவதற்கு அஞ்சுவார்களே, அத்தகைய திருவடிகளை அருளால் நமக்குத் தருவதற்கு வந்தருளுகிருன் இறைவன், குரு மூர்த்தியாக. இத்தகைய சிவலோகநாதனும் சிற்றம்பலத்துள் ஈசனுமாகிய பெருமானுக்கு அன்பு செய்வதென்ருல், அது எத் தகையதாக இருக்கவேண்டும்! நம்முடைய நிலையையும் நாம் நினைத்துப் பார்க்க வேண்டாமா?’ என்கிருள் நிதானமாக.

‘பெண்ணே, வெளியே விரைந்து வா, வந்து எங்களுடன் இப்போதே கலந்து கொள்வாய். வீண் பேச்சில் பொழுது போக்க வேண்டாம்’ என்பது மூன்ருமவளின் முடிவுரை.

**வேறு குறிப்புகள் :**

**இராப்பகல் :** இரவும் பகலும். இந்தத் தோழி தன் பாசம் பரஞ்சோதிக்கே என்று எப்போதும் (இரவும் பகலும்) கூறுவதுண்டு.

**பேர்தார் அமளி :** முதற் பாட்டிலும் இச் சொற்ருெடர் படுக்கையை வசீகரமாய்க் குறிக்கிறது; இப் பாட்டிலும் அப்படியே. ‘பூம் படுக்கையானதால் பாசம் கொண்டாய் போலும்!’ என்பது குறிப்பு.

**நேரிழையாய்! நேரிழையீர்!** கேள்வி கேட்கிறவளும் பதில் சொல்லுகிறவளும் நேராக நூல் பிடித்ததுபோல் பேசிக்கொள்கிருர்கள்; பரிகாச அம்புகளை ஒருவர்மீது ஒருவர் பிரயோகித்துக் கொண்டு விளையாடுகிருர்கள். இக் குறிப்பையும் இங்கே காண்கிறோம்.

விளையாட்டுப் பேச்சும் ஏச்சும், பாட்டின் பிற்பகுதியாக அமைந்திருக்கும் பேருண்மையைத் தூக்கிக் காட்டுகின்றன.

**கூசும் மலர்ப்பாதம் தந்தருள வந்தருளும் :** இதன் முற்பகுதி திருவடிகளின் அருமைகளையும், பிற்பகுதி அழகிய அதிசய எளிமையையும் வற்புறுத்துகின்றன.

**தேசன் :** ஞான ஒளிவீசும் குருதேசிகன் இறைவன் என்பதை இச் சொல் சுட்டிக்காட்டுகிறது.

**அன்பு ஆர்? யாம் ஆர்? :** அருமையும் எளிய அழகும் ஒருங்கே அமைந்திருக்கும் சிவபெருமான் பொருட்டு நாம் மேற்கொள்ளத்தக்க அன்பு எவ்வளவு உயர்ந்தது என்ற கருத்து இங்கே வற்புறுத்தப்படுகிறது. அன்பை மேற்கொள்ளுதற்குரிய நம்முடைய நிலையைக் குறித்து ஆலோசிக்கும்போது, எள்ளி நகையாடிக் கொண்டிருக்கும் இயல்பைவிட்டு நம் முழுக் கவனத்தையும் இறை அன்பிற்காகவும் இறை அருளுக்காகவுமே உரிமையாக்க வேண்டும் என்ற உண்மை இனிது புலனுகும்.

முதற் பாட்டில், இறைவன் திருவடிகளை இயன்ற அளவில் வாழ்த்துதல். வாழ்த்துவோரையும் கேட்போரையும் ஒருங்கே வாழ்வித்து இறையன்பில் ஈடுபடுத்தும் என்ருர். அக் கொள்கையின் தொடர்ச்சி இப்பாட்டில் மேலும் விளக்கம் பெறுகின்றது.





# 3

'முத்தன்ன வெண்ணகையாய்! முன்வந்(து) எதிர் எழுந்(து), ''என்

அத்தன்! ஆனந்தன்! அமுதன்!'' என்(று) அள்ளூறித்

தித்திக்கப் பேசுவாய்; வந்(து) உன் கடைதிறவாய்!'

'பத்துடையீர்! ஈசன் பழஅடியீர்! பாங்குடையீர்!

புத்தடியோம் புன்மைதீர்த்(து) ஆட்கொண்டால் பொல்லாதோ?'

'எத்தோநின் அன்புடமை? எல்லோம் அறியோமோ?'

'சித்தம் அழகியார் பாடாரோ நம்சிவனை?'

'இத்தனையும் வேண்டும் எமக்கு' ஏலோர் எம்பாவாய்.

## பதவுரை

| | |
|---|---|
| 'முத்து அன்ன வெண்ணகையாய் | ='முத்துப் போன்ற வெண்மையான பற்களையுடைய பெண்ணே! |
| முன் வந்து எதிர் எழுந்து | =முன்னைக் காலத்தில் எங்களுக்கு முன்னமே துயிலுணர்ந்து வந்து, |
| "என் அத்தன்! ஆனந்தன்! அமுதன்!" என்று | ="என் அப்பனே! ஆனந்த வடிவே! அழிவற்ற என் அமுதமே!" என்றெல்லாம் |
| அள்ளூறித் தித்திக்கப் பேசுவாய் | =வாய் ஊறி இனிக்க இனிக்கப் பாராட்டிப் பேசுவாயே; |
| வந்து உன் கடை திறவாய்!' | =இப்போது எழுந்து வந்து உன் படுக்கையறையின் வாசலைக் கூடத் திறக்கின்றாயில்லை! |

[என்கிறாள் கூட்டத்தில் ஒருத்தி. இளநகை அரும்பிய வண்ணம் கதவைத் திறவாது நின்றவளை நோக்கிக் கூறுவாள்.]

| | |
|---|---|
| 'பத்து உடையீர்! ஈசன் பழ அடியீர்! பாங்கு உடையீர்! | ='பக்தி உடையவர்களே! ஈசனுக்குப் பழைய அடியவர்களே! தோழமை உடையவர்களே! |
| புத்தடியோம் புன்மை தீர்த்து ஆட்கொண்டால், பொல்லாதோ?' | =புதிய தொண்டராகிய என் போன்றவர்களின் குற்றத்தை நீக்கி ஆட்கொண்டால் அது தீங்காகுமோ?' |

[என்று இவள் தன்னை ஏளனம் செய்தவளை நோக்கிப் பதில் சொல்லுகிறாள். இது கேட்டதும் வேறொரு பெண்,]

| | |
|---|---|
| 'எத்தோ நின் அன்பு உடைமை? | =உனது அன்புடைமை வேறு எவ்வகையானதோ? |
| எல்லோம் அறியோமோ?' | =நாங்களெல்லாம் அறியோமா?' |
| :[என்று கூறுகிறாள். | அதற்கு இவள்,] |
| 'சித்தம் அழகியார் பாடாரோ நம் சிவனை?' | ='நம் சிவபெருமானை அழகிய தூய நெஞ்சு உடையவர்கள் பாடாமல் இருப்பரோ?' |

[என்று ஒரு பதில்-கேள்வி போடுகிறாள். இதற்கு வெளியே இருப்பவர்களின் பிரதிநிதியாக முதல் தோழியின் பதில்:]

| | |
|---|---|
| 'இத்தனையும் வேண்டும் எமக்கு!' | =உன்னை அழைக்க வந்த எங்களுக்கு இவ்வளவும் வேண்டியதுதானே அம்மா! |

# தெளிவுரை

எழுப்பப்படும் பெண் முன்பெல்லாம் தன்னைப் பிறர் எழுப்ப வருமாறு வீட்டிலே தங்கிவிடமாட்டாள். மற்றவர்களுக்கு முன்பே தான் துயில் நீத்து எழுந்து பல் விளக்கித் தன்னைத் தூய்மை செய்துகொண்டு திருநீறு அணிந்து வெளிப்பட்டு அவர்களுக்கு எதிரே வந்து விடுவாளாம். 'என் அத்தன்! என் ஆனந்தன்! என் அமுதன்!' என்றெல்லாம் தித்திக்கப் பேசிக் கொண்டே எதிர்கொண்டு வருவாளாம். 'அப்படிப் பட்டவள் ஏன் இப்படி மாறிவிட்டாள்?' என்று கன்னியர் கூட்டத்தின் அதிசயத்தைத் தெரிவிக்கிறாள் பிரதிநிதியாக ஒரு தோழி. 'இப்போதும் எழுந்து வந்து கதவைத் திறக்கவில்லையே!' என்கிறாள்.

அதற்கு இவள், 'ஆமாம், நீங்கள் எல்லாம் மிகப் பழைய அடியார்கள்; பழுத்த பக்தியுடையவர்கள்; நாங்களோ அத்தகைய அனுபவம் இல்லாத புதுத் தொண்டர்கள். எனினும் நீங்கள் என் அருமைத் தோழிமாரல்லவா? புன்மை தீர்த்து ஆட்கொண்டால் பொல்லாத காரியம் ஆகுமா?' என்று பதில் சொல்லுகிறாள்.

வேறொரு தோழி அந்தப் பரிகாசப்பேச்சை மாற்றி, 'ஏனம்மா இப்படிச் சொல்லுகிறாய் உன்னுடைய பழுத்த அன்பு வேறு எவ்விதமாகத்தான் இருக்க முடியும்? அதை நாங்களெல்லாம் அறிய மாட்டோம் என்று நினைத்து விட்டாயா?' என்கிறாள்.

உள்ளே இருப்பவள், 'அழகிய உள்ளம் படைத்தவர்கள் சிவனைப் பாடுவார்களே அன்றி விளையாடி ஏசுவதில் பொழுது போக்குவார்களோ என்றுதான் எண்ணுகிறேன்' என்கிறாள்.

கடைசியாக, முதலில் பேசிய தோழி, 'ஓகோ, உன்னை எழுப்ப வந்த எங்களுக்கு இத்தனையும் வேண்டியதுதான் அம்மா!' என்று கூறி முடிக்கிறாள்.

அப்பால் உள்ளே இருப்பவள் கதவைத் திறந்து கொண்டு வந்து மற்றவர்களுடன் கலந்து கொள்ளுகிறாள். எல்லோரும் வேறொருத்தியைத் துயிலெழுப்பப் போகிறார்கள்.

**விளக்கம் :**

முந்திய திருப்பாட்டில், ஆண்டவன் உண்மை யன்பு உடையவர்களுக்குச் சுலபனுகிப் பிறருக்கு அரியவனுகி யிருப்பவன் என்ற கருத்தைக் கண்டோம். இப் பாட்டிலே அந்த அருள் அழகிய உள்ளம் படைத்த அன்பர்களின் அன்பை அதிசயமாய்ப் பக்குவப்படுத்திப் பயன்படுத்திக் கொள்கிறது என்ற உண்மையைக் காண்கிருேம்.

**முன் :** சென்ற ஆண்டில் நிகழ்ந்ததை நினைத்துப் பேசுகிருள்.

**முத்து அன்ன வெண்ணகை,** இப்பெண்ணின் கள்ளமிலா உள்ளத்தின் அழகிற்கும் தூய்மைக்கும் அறிகுறி, இப்பெண்ணிடம் பக்திச் சுவைபோல் நகைச் சுவையும் பக்குவமாய்க் கலந்து அமைந்திருக்கிறது எனலாம். தித்திக்கப் பேசும் திறனும் உண்டு.

**பத்து :** 'பற்று' எனப் பொருள்படும். அடியவர்களுடைய பத்துச்செயல்களைக் குறிப்பதால் 'பத்து' என்று பக்தியைக் குறிப்பதுண்டுஎன்றும் கூறுவர். இச்செயல்கள் ஆவன: 1. பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்களாக இருப்பது, 2. குருவுக்கு வழிபாடு செய்தல், 3. ஆசையோடு சிவனைப் பாடுதல், 4. இறைவனது அழகிய திருப்பெயர்களை ஓதுதல், 5. இறை வழிபாட்டில் ஈடுபடுதல், 6. சிவ சரிதங்களைக் கேட்டு இன்புறுதல், 7. சிவ தர்மங்களைச் செய்தல், 8. சிவாலயத்தைச் சுத்தமாக வைத்துப் பாதுகாத்தல், 9. அடியவர்க்கு அடியவராக இருத்தல், 10. தொண்டர்கள் கொடுப்பதைப் பிரசாதமாக மதித்தல்.

**சித்தம் அழகியார் :** சித்தத்திற்கு அழகு அதனை இறைவனுக்குக் கோயிலாக்கித் தூய அழகிய நினைவுகளால் பாதுகாப்பது.

**இத்தனையும் வேண்டும் எமக்கு :** தனை = அளவு.





# 4

'ஒண்ணித் திலநகையாய்! இன்னம் புலர்ந்தின்றோ?'
'வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ?'
'எண்ணிக் கொ(டு) உள்ளவா சொல்லுகோம்; அவ்வளவும்
கண்ணைத் துயின்(று) அவமே காலத்தைப் போக்காதே!'
'விண்ணுக்(கு) ஒரு மருந்தை, வேத விழுப்பொருளை,
கண்ணுக்(கு) இனியானைப் பாடிக் கசிந்(து), உள்ளம்
உள்நெக்கு நின்(று) உருக, யாம் மாட்டோம்; நீயே வந்(து)
எண்ணிக் குறையில் துயில்!' ஏலோர் எம்பாவாய்.

## பதவுரை

ஒள் நித்தில நகையாய்!=ஒளி பொருந்திய முத்துப் போன்ற பற்களை உடையவளே!

இன்னம் புலர்ந்தின்றோ?'=இன்னும் பொழுது விடியவில்லையா?

[என்று கன்னியர் கூட்டத்தில் ஒருத்தி கேட்கிறாள், ஒரு வீட்டுக்குள்ளே இருப்பவளை நோக்கி. இவள் பதில் சொல்லுகிறாள், படுக்கையில் கிடந்தவாறே.]

'வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ?'=அழகிய கிளியின் மொழிபோன்ற மொழியினையுடைய பெண்கள் எல்லாரும் இங்கு வந்து விட்டனரா?

[இவள் கூறக்கேட்டதும், வெளியே இருப்பவள் கூறுகிறாள்.]

'எண்ணிக் கொடு உள்ளவா செல்லுகோம்;=வந்தவர்களைக் கணக்கிட்டு உள்ளவாறு எண்ணித் தெரிவிப்போம்;

அவ்வளவும் கண்ணைத் துயின்று அவமே காலத்தைப் போக்காதே!'=ஆனால் நாங்கள் கணக்கிட்டுத் தெரிவிக்கும் அவ்வளவு நேரம் வரை நீ ஒரு குட்டித் தூக்கம் போட்டுப் பொழுதை வீணாக்கி விடாதே!

[வெளியே இருப்பவருள் ஒருத்தி இப்போது பேசுகிறாள்.]

'விண்ணுக்கு ஒரு மருந்தை வேத விழுப்பொருளை,='விண்ணவர்களுக்கு ஒப்பற்ற அமுதமாக உள்ளவனும், வேதங்களின் சிறந்த பொருளாக உள்ளவனும்,

கண்ணுக்கு இனியானை,=காட்சிக்கு இனிமையாக இருப்பவனுமாகிய சிவபெருமானை,

பாடிக் கசிந்து உள்ளம் உள் நெக்கு நின்று உருக,=பாடி உள்ளம் இளகிக் கட்டுவிட்டு உருகிக் கொண்டிருப்பதால்

யாம் மாட்டோம்;=நாங்கள் எண்ணிச் சொல்ல இயலாத நிலையில் இருக்கிறோம்;

நீயே வந்து எண்ணிக் குறையில் துயில்!'=ஆதலால் நீயே எழுந்து வந்து இங்கு வந்திருப்பவர்களை எண்ணிக் கணக்கில் குறைவு இருந்தால் நீ மறுபடியும் போய் உறங்கு!' என்கிறாள்.

## தெளிவுரை

முந்திய பாட்டு 'முத்து அன்னவெண்ணகையாய்!' என்று தொடங்குவதைக் கண்டோம். இந்தப் பாட்டு 'ஒண்ணித்தில நகையாய்!' என்று தொடங்குவதைக் காண்கிறோம். முத்து இங்கே 'நித்திலம்' என்று கூறப்படுகிறது. இந்தத் தோழியும் அந்த வீட்டுத் தோழிபோல் நகையாடிப் பேசும் பழக்கமுடையவள் எனக் கருதலாம். இருவரும் இளநகை அரும்புவதுடன் திருப்தி அடையாமல் வெண்ணிறப் பற்கள் புலப்படச் சிரிக்கும் பழக்கமுமுடையவர்களே.

இப்பெண்ணை நோக்கி, 'உனக்கு இன்னமுமா பொழுது விடியவில்லை?' என்று கேட்கிறாள் வெளியே நிற்பவருள் ஒருத்தி, 'உன்னுடைய இந்த நிலையை நோக்கியே நீ சிரித்துக் கொள்ளலாம்; அப்போது உன் நகையும் பயன்படும்!' என்பது குறிப்பு.

முத்து நகையாள் தன் தோழியரை எல்லாம் 'கிளிமொழியார்' என்று குறிப்பிடுகிறாள். கிளிபோல் வண்ணமாய்க் கொஞ்சிப் பேசுகிறாள் வெளியே இருக்கும் தோழி என்ற குறிப்பையும் இங்கே காணலாம். 'உன்னைப் போன்ற கிளிமொழியார் அத்தனை பேரும் வந்து விட்டார்களா?' என்று, படுக்கையிலிருந்து எழுந்திராமலே கேட்கிறாள். கண்களையும் மூடிக்கொண்டே இப்படிக் கேட்கிறாள் என்று ஊகிக்கலாம்.

'எண்ணிக் கொண்டு உள்ளவாறு சொல்லுவோம்' என்று பதில் வருகிறது. 'அவ்வளவு நேரம் வரை நான் தூங்கிக் கொண்டிருக்கலாமல்லவா?' என்று இவள் சூழ்ச்சி செய்வதுபோல் அந்தக் கிளிமொழியாள் கற்பனை செய்து கொண்டு, 'அவ்வளவும் கண்ணைத் துயின்று அவமே காலத்தைப் போக்காதே!' என்று எச்சரிக்கை செய்வதுபோல் பரிகசிக்கிறாள்.

உடனே வேறொருத்தி பேச்சைத் தொடர்ந்து நடத்துகிறாள். 'எண்ணிக் கணக்கிட்டுச் சொல்லுகிறோம்' என்று சொன்னவளின் கருத்தைக் கண்டித்துப் பேசுவதுபோல், இவள் 'எங்களால் எண்ணிக் கணக்கிட முடியாதம்மா? அதற்கு உரிய நிதான புத்தி

யுடன் நாங்கள் இங்கே வந்திருக்கவில்லை. இறைவனைப் பாடி உள்ளம் கசிந்து உள் நெகிழ்ந்து உருகிக் கொண்டிருக்கிறோமே, எங்களால் எப்படி எண்ணிக் கணக்கிட முடியும்?' என்கிறாள். 'ஆகவே, நீயே வந்து எண்ணிக் கொள்ளவேண்டியதுதான்' என்கிறாள். 'எண்ணிப் பார்த்துக் குறையிருந்தால் மறுபடியும் போய்ப் படுத்துத் தொடர்ந்து தூங்குவாய்!' என்று கூறி முடிக்கிறாள்.

'விழித்துக்கொள், எழுந்திரு, விரைவில் எங்களுடன் கலந்து கொள்' என்றெல்லாம் துரிதப்படுத்துவது எவ்வளவு நகைச்சுவை தோய்ந்த வாக்காக வருகிறது பாருங்கள்!

**புலர்ந்தின்றோ?:** புலர்தல் = விடிதல். 'புலர்ந்ததின்றோ?' என்பது விகாரத்தால் 'புலர்ந்தின்றோ' என்று ஆயிற்று. ஓகாரம் வினாவின் பொருட்டு; இது எதிர்மறையும் ஆகும்.

முந்திய பாட்டில் வரும் பரிகாச உரையாடல் இப்பாட்டிலே மேலும் வேகம் பெற்றிருக்கிறது. நகைச் சுவையும் பக்திச் சுவையும் கவிச் சுவையும் மேலும் பொங்கி வருகின்றன. சிறகு கட்டிய அம்புகள்போல் பறக்கின்றன சொற்கள்.

இந்த இரண்டு பாடல்களிலும் சிறப்பான ஒரு கருத்துத் தொடர்பையும் காண்கிறோம். அழகிய சித்தம் உடையவர்கள் சிவனைப் பாடுவார்கள். 'அத்தன், ஆனந்தன், அமுதன்' என்று தித்திக்கப் பேசுவார்கள். இதை 'முத்தன்ன வெண்ணகையாய்!' என்ற பாட்டில் கண்டோம். இந்தப் பாட்டிலே, வண்ணக் கிளிமொழியார், கண்ணுக்கினியனும் விண்ணுக்கு ஒரு மருந்துமாகிய பெருமானை உருகிப்பாடுகிறார்கள்.





# 5

'மால்அறியா, நான்முகனும் காணா, மலையினை "நாம்
போல்அறிவோம்!'' என்(று) உள்ள பொக்கங்களே பேசும்
பால்ஊறு தேன்வாய்ப் படிறீ! கடைதிறவாய்';
'ஞாலமே, விண்ணே, பிறவே, அறிவரியான்
கோலமும், நம்மைஆட் கொண்டருளிக் கோதாட்டும்
சீலமும் பாடிச் "சிவனே! சிவனே!'' என்(று)
ஓலம் இடினும் உணராய், உணராய்காண்!
ஏலக் குழலி பரி(சு)!' ஏலோர் எம்பாவாய்.

'மால் அறியா, = திருமாலும் அறியாததாய்

நான் முகனும் காணா, = பிரமனும் காணாததாய் இருக்கு

மலையினை = ஒளிமலையாகிய சிவபெருமா

''நாம் போல் அறிவோம்'' என்று = ''நாங்கள் அறிவோம் போலவு என்று

உள்ள பொக்கங்களே பேசும் = இவ்வாறு உளவாகிய பொய் யுரைகளையே பேசும்

பால் ஊறு தேன் வாய்ப் படிறீ! = சுரக்கின்ற பாலையும் தேனையு போல் இனிமை தோன்றப் பேசும் வாயை உடைய வஞ்சக

கடை திறவாய் = உன் வாசற்கதவைத் திறப் பாயாக

[என்று சொல்லுகிறாள் ஒருத்தி. உடனே இன்னொருத்தி 'வஞ்சகி!' என்று கூப்பிட்டது உள்ளே இருப்பவள் காதில் விழா படி உரக்கப் பேசுகிறாள்.]

'ஞாலமே, விண்ணே, பிறவே, அறிவரியான் கோலமும் = மண்ணும் விண்ணும் பிற உலகங்களும் அறிதற்கு அரி சிவபெருமானது திருக்கோல தையும்,

நம்மை ஆட்கொண்டருளிக் கோதாட்டும் சீலமும் = நம்மையும் அப்பெருமான் ஆளாக்கிக் கொண்டருளிச் சீராட்டும் சீலத்தையும் (அருட் குணத்தையும்)

பாடி, ''சிவனே! சிவனே!'' என்று ஓலம் இடினும், = (புகழ்ந்து) பாடி, ''சிவனே! சிவனே!'' என்று ஓலமிட்டுக் கூவியும்,

உணராய், உணராய் காண்! = உணர்ந்தாயில்லை, துயி லுணர்ந்து எழுந்தாயல்லையே!

ஏலக் குழலி பரி(சு)!' = மயிர்ச்சாந்து அணிந்த கூந்த யுடைய உன் தன்மை என்னே

## தெளிவுரை

மூவர்க்கும் முதல்வனான சிவபெருமானின் அடிமுடிகளை மாலும் அறியான்; நான்முகனும் காணான்; அத்தகைய ஒளிமலை வடிவாக இறைவன் நின்றருளினான் என்பது திருவண்ணாமலைப் புராணக்கதை. சிவபெருமானின் தனிப் பெருஞ் சிறப்பைச் சுட்டிக் காட்டுவது இக்கதை.

'சிவன் பெருமை இப்படியிருக்க, நம்மைப் போன்றவர்கள் அறிந்து விட்டதாக நீ பேசுவாய்!' என்கிறாள் ஒருத்தி, உள்ளே இருக்கும் தோழியை நோக்கி. 'நாம் அறிவோம்!' என்று இவள் பேசியதெல்லாம் பொய்யுரை என்கிறாள். இத்தகைய பொய்யுரைகளை இத் தோழி எவ்வளவோ இனிமையாகப் பேசிவிடுவாளாம். பாலூறத் தேனூற அவ்வளவு இரசமாகப் பேசுவாளாம். இத்தகைய தோழியை அவள் 'பாலூறு தேன்வாய் வஞ்சகி!' என்கிறாள்.

உள்ளே இருப்பவளை வெளியே இருப்பவள் 'வஞ்சகி!' என்று உரக்கக் கூப்பிடுகிறாள். இப்படிக் கூப்பிட்டு 'உன் வாசற் கதவைத் திறவாய்' என்று உத்தரவு போடுவது போல் பேசுகிறாள். அந்தப் பேச்சுகள் பொய்யுரைகளாக இல்லாவிட்டால் இவள் இப்போது இவ்வாறு உறங்கிக் கிடப்பது எப்படிப் பொருந்தும் என்பது குறிப்பு.

'வஞ்சகி!' என்று ஒரு தோழியை மற்றொரு தோழி கூப்பிடுவது தகுதியன்று என்று கருதியதுபோல் இன்னொருத்தி, அந்தச் சொல் உள்ளே இருப்பவள் காதில் விழாதபடி ஓலமிடுகிறாள். 'ஓலமிடினும் உணராய், உணராய் காண்!' என்கிறாள்.

எம்பெருமானுடைய கோலமும் சீலமும் பாடிச் 'சிவனே, சிவனே!' என்று ஓலமிட்டாலும் தோழிக்கு உணர்ச்சி வரவில்லையே என்கிறாள். இறைவனுடைய கோலம் பிறர் அறிந்து கொள்வதற்கு அரியது; சீலமோ வலியவந்து ஆட்கொண்டு அருளுவது.

'ஏலக்குழலி பரிசு!' என்று முடிகின்றது இத் திருப்பாட்டு. 'நீ தலைக்கு நல்ல தைலம் பூசி அழகு செய்துகொண்டிருக்கிறாய்;

கூந்தலுக்கு மணம் ஊட்டிக்கொண்டிருக்கிறாய்; ஆனால் இது மூளையுள் ஊறி உணர்ச்சி உண்டாக்கவில்லையே!' என்று கூறுவது போல் அமைந்திருக்கிறது இப்பாட்டின் இப்பகுதி.

**குறிப்புகள்:**

'தேவருட் சிறந்த திருமால், பிரமன் இவர்களால் அறிய இயலாத இறைவனை நாம் அறிவோம் என்று எழுப்பப் பட்டவள் கூறியது, விளையாட்டாகக் கூறிய பொய்யுரையாகும்.' (பண்டித மணி கதிரேசச் செட்டியாரின் கதிர்மணி விளக்கப் பேருரை). பொய்யுரை இனிய உரையாக இருக்கலாம், எனினும் பொய்யுரைதான் என்கிறாள் வெளியே இருந்து முதலில் பேசியவள்.

**கோதாட்டும் சீலம்:** கோது=குற்றம்; கோதாட்டுதல்=குற்றத்தை ஒழித்துச் சீராட்டுதல்.

**ஓலம்:** அபயம் வேண்டிக் கூவும் குறிப்புமொழி.

**ஏலம்:** கூந்தலுக்கு இடும் வாசனைச் சாந்து இது; மயிர்ச் சாந்து பூசி அழகு செய்துகொண்டிருக்கிறாள் என்று கூறியிருப்பதிலிருந்து, இத்தோழி தன்னை அலங்கரித்துக்கொண்டு அப்படியே உறங்கிப் போய்விட்டாள் என்று ஊகிக்கலாம். இறைவன் எழுந்தருளியிருக்கும் திருக்கோலத்தை அலங்கரித்துக் கண்குளிர அகங்குளிரக் கண்டு இன்புறுமல் இந்த உடம்பை அலங்கரித்து இன்புறும் தோழியின் நிலை இரங்கத் தக்கது என்ற குறிப்பையும் 'ஏலக் குழலி' என்ற சொற்றொடரில் காணலாம்.

**பரிசு:** 'தோழியே! இது உன் தன்மை என்றால் நாங்கள் என்ன செய்வது, என் செய்ய வல்லோம்?' இப்படி இரங்குதலை உணர்த்துகிறது 'பரிசு' எனலாம்.

இப்படி இரங்குவதைக் கேட்ட தோழி வெளியே வந்து அவர்களோடு கலந்துகொண்டாள் என்பது குறிப்பு.





# 6

'மானே! நீ நென்னலே, "நானே வந்(து) உங்களை
நானே எழுப்புவன்" என்றலும், நாணமே
போன திசை பகராய்! இன்னம் புலர்ந்தின்றோ?
வானே, நிலனே, பிறவே, அறிவரியான்
தானே வந்(து), எம்மைத் தலையளித்(து) ஆட்கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்(கு), உன்வாய் திறவாய்;
ஊனே உருகாய்; உனக்கே உறும்! எமக்கும்
ஏனோர்க்கும் தம்கோனைப் பா(டு)' ஏலோர் எம்பாவாய்.

‘மானே! நீ நென்னலை = ‘மருண்டு பார்க்கும் பார்வையால் மான் போன்றவளே! நீ நேற்று என்ன சொன்னாய் என்பதை இப்போது நினைவூட்டுகிறோம் உனக்கு:

“நாளை வந்து உங்களை நானே எழுப்புவன்” என்றலும், = “நாளை நீங்கள் எழுந்து வருவதற்கு முன்பு ‘நானே எழுந்து வந்து உங்களை எழுப்புவேன்’ என்று எங்களிடம் சொல்லிப் போய் விட்டாயே.

நாணுமே போனதிசை பகராய்! = அப்படி நாணம் இல்லாமல்போன திசையைச் சொல்லுவாயாக!

இன்னம் புலர்ந்தின்றோ? = இன்னும் இருள் விடியவில்லையா?

வானே, நிலனே, பிறவே, அறிவரியான் தானே வந்(து) = வானமும் நிலமும் பிற உலகங்களும் அறிதற்கு அரியவனை சிவபெருமான் தானாகவே வலிய நம்மிடம் வந்து

எம்மைத் தலையளித்து ஆட் கொண்டருளும் = நம்மைத் தலைஅளி செய்து (சிறந்த முறையில் அருள் புரிந்து) ஆட்கொண்டு அந்த அருளுக்கு அறிகுறியாகக் கொடுத்தருளும்

வான் வார் கழல் பாடி வந்தோர்க்கு = அழகிய நெடிய வீரக்கழல் அணிந்த திருவடிகளைப் புகழ்ந்து பாடி வந்தவர்களாகிய எம்பொருட்டு

உன் வாய் திறவாய்; = உன் வாயையும் திறந்தாயில்லை;

ஊனே உருகாய்; = உடம்பும் உருகப்பெறுகின்றாய் இல்லை;

உனக்கே உறும்! = இந்த நிலை உனக்கே பொருந்துவதாகும், அம்மா!

எமக்கும் ஏனோர்க்கும் தம் கோனைப் பாடு’. = எங்களுக்கும் மற்றெல்லோர்க்கும் தலைவனாகிய பெருமானை நீ பாடுவாயாக’.

மான் விழியாள் ஒருத்தியை நோக்கிக் கூறுவதாக இப்பாட்டு அமைந்திருக்கிறது. இவள் நேற்று என்ன சொன்னாள் என்பதை நினைவூட்டுகிறாள் கூட்டத்தில் இருக்கும் ஒரு தோழி. கன்னியர் ஒருங்கே கூடிப் பாவை நோன்பு குறித்து விடியுமுன் நீராடப் போவது பற்றி இதற்கு முந்திய தினத்தில் ஆலோசனை செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது, இப்போது எழுப்பப்படும் மான்விழியாளும் அங்கே இருந்தாள்; ஆலோசனையிலும் கலந்து கொண்டாள்; 'நானே விடியுமுன் எழுந்து வந்து எல்லோரையும் எழுப்புவேன்' என்றும் சொன்னாள்; சொல்லிவிட்டுப் போய் விட்டாள்.

அந்த வாக்கை மறந்து உறங்கிப்போய் விட்டாள். இப்பொழுது மற்றெல்லோரும் இவளை வீட்டு வாசலில் வந்து இறைவன் புகழைப் பாடிக் கொண்டிருக்கிறார்கள். இதைப் படுக்கையில் கிடந்தவாறே அறிந்து கொள்கிறாள் இவள். 'இனி நாணத்தால் நம்மை அஞ்சி நோக்க வேண்டியவளே இவள்' என்ற குறிப்புடன் வாசலில் நிற்கும் பெண்கள்-கூட்டத்தின் பிரதிநிதியாக ஒருத்தி, 'மானே!' என்று அழைப்பாளாயினள்.

'கொஞ்சமும் வெட்கமில்லையே; உறங்கிக் கிடக்கிறாயே; நீ போன திசையே தெரியவில்லையே; எந்தத் திசையில் போயிருக்கிறாய் அம்மா! தயவு செய்து சொல்லு' என்ற குறிப்பைக் காண்கிறோம், 'நாணுமே போன திசை பகராய்!' என்ற வாக்கிலே. 'அந்தச் சொற்கள் சென்ற திசையையும் அறிவிக்கமாட்டாய்!' என்ற குறிப்பையும் காண்கிறோம்.

'இன்னமுமா பொழுது விடியவில்லை?' என்ற ஒரு கேள்வி கேட்டுவிட்டு, வெளியே நிற்பவர்களின் சார்பாகப் பேசுகிறவள், 'வானே நிலனே......வந்தோர்க்கு உன் வாய் திறவாய்' என்று மேலும் பேசுகிறாள். வானுலகத்தார், நில உலகத்தார், பிற உலகத்தார் ஆகிய எவரும் அறிதற்கு அரிய சிவபெருமான் தானே வந்து தலையாய கருணை புரிந்து நம்மை ஆட்கொள்ளுகிறான், அவனுடைய திருவடிகளைப் பாடிக்கொண்டு வந்திருக்கிறோம். ஆகவே எங்களிடம் நீ வாய் திறந்து பேச வேண்டாமா?

இவ்வாறு வெளியே இருப்பவள் பேசி விட்டு மேலும் சொல்லுகிறாள்.

'உன் உடம்பும் உருகவில்லையே அம்மா! இது உனக்குத்தான் பொருந்தும்!' என்றும் சொல்லுகிறாள். பிறகு, எங்ஙனமாயினும் இறைவனையே பாடுதல் கடமை என்பதை வற்புறுத்தி, 'எமக்கும் ஏனோர்க்குந்தம் கோனைப்பாடு' என்று கூறி முடிக்கிறாள். இவளை எழுப்ப வந்திருக்கும் தங்களுக்குச் சிவபெருமான் தலைவனாய் இருப்பதுபோல் மற்றெல்லோருக்கும் தலைவனாக இருக்கிறான் என்பதை வற்புறுத்துகிறாள்.

**ஏனோர் :** இறைவனை அறிந்திராதவர்களுக்கும் பாடிப் பரவ, மாகாதவர்களுக்கும் அவனே தலைவன், இவர்களுக்கு எப்படித் தலைவனோ அப்படியே அவர்களுக்கும் தலைவன்.

**குறிப்புகள்:**

முந்திய பாட்டில் சிவபெருமானுடைய கோலமும் சீலமும் பாடி அப்பெருமானது அருளுக்கு இலக்காக வேண்டும் என்பதை அறிவுறுத்திய மணிவாசகப் பெருமான், இப்பாட்டிலே இறைவன் மயங்கிக் கிடக்கும் உயிர்களுக்குத் தானே வந்து சிறந்த முறையில் அருள் சுரந்து ஆட்கொள்ளுகிறான் என்பதைத் தெளிவுபடுத்துகிறார்.

**போன திசை :** செயல்முறையில் நிற்கவில்லை என்பதைப் பழித்துரைக்கும் சொற்றொடராக வருகிறது இது.

**இன்னும் புலர்ந்தின்றோ :** இவ்வாக்கியத்தை இத்திருப்பாட்டில் மூன்றாம் அடியில் காண்கிறோம்; இது நான்காம் பாட்டில் முதல் அடியில் காணப்படுகிறது.

**வான்வார் கழல் :** கழல் ஆகு பெயராய்த் திருவடியை உணர்த்துகிறது. வான் = பெருமை; திருவடிக்குப் பெருமையாவது உயிர்களைப் பாதுகாத்து ஆட்கொள்வது.

**தானே வந்து :** பக்குவகாலம் அறிந்து வலிய வந்து என்பது குறிப்பு.





# 7

'அன்னே! இவையும் சிலவோ? பல அமரர்
உன்னற்(கு) அரியான், ஒருவன், இருஞ்சீரான்
சின்னங்கள் கேட்பச் "சிவன்" என்றே வாய்திறப்பாய்;
"தென்னு" என்னுமுன்னம் தீசேர் மெழு(கு) ஒப்பாய்;
"என்னுனே, என் அரையன், இன்னமு(து)" என்(று) எல்லோமும்
சொன்னேம்கேள், வெவ்வேருய்; இன்னம் துயிலுதியோ?
வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்;
என்னே துயிலின் பரிசு!' ஏலோர் எம்பாவாய்.

| | |
|---|---|
| 'அன்னே! இவையும் சிலவோ? | = 'தாயே! உன் செயல்களுள் இவைகளும் சில உளவோ? |
| பல அமரர் உன்னற்கு அரியான், ஒருவன், இருஞ்சீரான் சின்னங்கள் | = பல தேவர்களால் நினைத்தற்கும் அரியவனும், ஒப்பற்றவனும், மிக்க பெருமை உடையவனும் ஆகிய இறைவனுக்கு உரிய சின்னங்களாகிய எக்காளம் சங்கு முதலியன (ஒலிக்க,) |
| கேட்பச் "சிவன்" என்றே வாய் திறப்பாய் | = காதில் கேட்ட அளவில் சிவ சிவ என்றே சொல்லி வாயைத் திறப்பாய்; |
| "தென்னா" என்னா முன்னம் | = (நாங்கள் சிவபெருமானைப்) பாடவிரும்பித் "தென்னா" என்று தொடங்குவதற்கு முன்பே; அல்லது 'தென்னவனே' என்று பிறர் சொல்லுமுன்பே |
| தீ சேர் மெழுகு ஒப்பாய் | = தீயில் இடப்பட்ட மெழுகு போல் உருகுவாய்; (அத்தகைய நீ இப்பொழுதோ) |
| "என்னானை, என் அரையன் இன்னமுது" என்று | = "எனக்கு உரிமையுடைய தந்தை, எனக்கு அரசன், இனிய அமுதம் என்று |
| எல்லோமும் சொன்னோம் கேள் வெவ்வேறாய்; | = நாங்கள் அனைவரும் தனித் தனியாகவும் கூறினோம், அவற்றைக் கேட்பாய்; |
| இன்னம் துயிலுதியோ? | = (கேட்டும்) இன்னம் உறங்குகிறாயோ? |
| வன்னெஞ்சப் பேதையர் போல் வாளா கிடத்தியால் | = (இறைவன் பொருட்டு) குழைதல் இல்லாத நெஞ்சம் படைத்த அறிவிலார் போலச் சும்மா கிடக்கின்றாய்; |
| என்னே துயிலின் பரிசு!' | = உறக்கத்தின் தன்மைதான் எத்தகையது! |

'அன்னையே!' என்று பொருள்படும் 'அன்னே!' என்று தொடங்குகிறது இப்பாட்டு. 'நீ தாயுள்ளம் கொண்டவள்; நீயும் உறங்கிக் கிடக்கிறாயா?' என்பது இப்பாட்டின் உயிர்நிலைப் பொருள். தாய்போல் அவ்வளவு நல்லவளாக இருக்கும் தோழியுமா இப்படிச் செய்கிறாள் என்ற ஆச்சரியத்தோடு 'அன்னே'! என்று பேசத்தொடங்குகிறார்கள் கன்னியர்கள்: அதாவது, அவர்கள் பிரதிநிதியாக ஒருத்தி இப்படிப் பேசத் தொடங்குகிறாள். 'உன்னுடைய செயல்களில் சில இப்படியும் இருக்கலாமா?' என்று கேட்கிறார்கள்.

தேவர்கள் பலராலும் நினைப்பதற்கு அரியவன் என்றும் ஒப்பற்றவன் என்றும் மிக்க பெருமை உடையவன் என்றும் சிவ பெருமானைக் குறிப்பிட்டு, அவனைப் பற்றிய சின்னங்கள் எக்காளம், சங்கு முதலியவற்றின் ஒலிகள் காதில் கேட்டதுமே, சிவசிவ என்று இவள் வாய் சொல்லிவிடுமாம், தன்னை அறியாமலே, வாய் திறந்து சிவசிவ என்று இவள் கூறுவதாகச் சொல்லப் படவில்லை; சிவன் என்றே வாய் திறப்பாளாம். சிவன் கோவிலில் ஊதும் திருச்சின்னங்கள் இவளைப் படுத்தும் பாடுஇது!

'தென்னாடுடைய சிவனே! போற்றி' என்று முழுக்கச் சொன்னாலும் உருகாதார் பலர் இருக்கும் இவ்வுலகத்திலே, 'தென்னா' என்று சொல்லி முடிப்பதற்கு முன்பே தீசேர் மெழுகுபோல் உருகி விடுவாளாம்.

அத்தகைய மனநிலை வாய்க்கப்பெற்ற இப்பெண்ணின் நிலை இப்போது எப்படி மாறிவிட்டது என்று பெண்கள் கூட்டம் அதிசயிப்பதுபோல் அமைந்திருக்கிறது இப்பாட்டு. 'என் ஆனை, என் அரையன், இன்னமுது' என்று எல்லோரும் வெவ்வேறாகச் சொல்லிக்கொண்டிருக்க, இவற்றைக் கேட்டும் இன்னும் உறங்குகிறாளே என்று வியப்படைகிறார்கள். அன்பில்லாத வன்னெஞ்சமுள்ள அறிவிலிகள் போலச் சும்மா கிடக்கிறாயே என்கிறார்கள்.

'அம்மா, தாயே! நீ நல்லவள்தான்; ஆனால் உறக்கத்தின் தன்மையை என்னென்பது?' என்று கூறிமுடிக்கிறார்கள்.

குறிப்புகள்:

**அன்னே!** எழுப்ப வந்திருப்பவர்களில் வயதில் மூத்தவர்களும் இருக்கத்தான் செய்வார்கள். ஆகவே 'அன்னே!' என்பதை இங்கே செல்லப் பேச்சு அல்லது செல்வமொழி எனக் கொள்ளுதல் பொருந்தும். தாய்க் குலத்தினரான பெண்களில் சிலரிடம் தாய்மைப் பண்பு அதிக அளவில் காணப்படுவதுண்டு: அத்தகைய பெண்களில் இவள் ஒருத்தி எனக் கருதலாம்

**இவையும் சிலவோ?** 'தாய்மைப் பண்புடன் எங்களுடன் பழகும் நீ இறைவனிடம் பேரன்பு உடையவள் என்பதை நன்கறிவோம். ஆனால் இப்போது அன்பு இல்லாதவள் போலக் கிடப்பதிலிருந்து, வேறொரு முரணான செயலையும் காண்கின்றோம்' என்கிறார்கள். முரண்பட்ட இச்செயல்கள் இவை என்று சுட்டிக் காட்டப்படுகின்றன. 'இவ்விதமாகவும் சில செயல்கள், தாயே! உன்பால் உள்ளனவோ?' என்ற பொருள் பொதிந்த குறிப்பை இங்கே காண்கிறோம்.

'இவையும் சிலவோ?'' என்பதை எழுப்ப வந்தவர்களுடன் தொடர்பு படுத்திப் பொருள் கூறுவதும் உண்டு. 'வீடுதோறும் செல்வதும் உறங்குவோர்களை எழுப்புவதும் ஆகிய இவை எங்கள் கடமைகளுள் சிலபோலும்' என்ற பொருளைத் 'திருவெம்பாவை 'திருப்பள்ளியெழுச்சி' என்ற பெயருள்ள சைவ சித்தாந்த மகா சமாஜ வெளியீட்டில் காணலாம்.

**சின்னங்கள் கேட்பச் சிவன் என்றே வாய் திறப்பாய்:** மங்கல ஒலி கேட்ட அளவில் 'சிவசிவ' மகாமந்திரம் நினைவிற்குவந்து விடுமாம்.

**தென்னு:** தென்னன் (பாண்டியன்) மருமகனாகி மீனாட்சியை மணந்து உலகம் முழுதாண்ட சுந்தரன் என்று சிவனைக் கூறுகிறது திருவிளையாடற் புராணம்.





# 8

'கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்;
ஏழில் இயம்ப, இயம்பும்வெண் சங்கெங்கும்;
கேழில் பரஞ்சோதி, கேழில் பரங்கருணே,
கேழில் விழுப் பொருள்கள் பாடிஞேம்; கேட்டிலேயோ?
வாழி ஈ(து) என்ன உறக்கமோ? வாய்திறவாய்;
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறே?
ஊழி முதல்வஞய் நின்ற ஒருவனே,
ஏழை பங்காளனேயே பாடு' ஏலோர் எம்பாவாய்,

## பதவுரை

| | |
|---|---|
| 'கோழி சிலம்ப, | = கோழி கூவ |
| சிலம்பும் குருகு எங்கும். | = எங்கும் பறவைகள் ஒலிக்கின்றன. |
| ஏழில் இயம்ப | = நாகசுரம் வாசிக்க |
| இயம்பும் வெண்சங்கு எங்கும்; | = வெண்சங்குகள் எங்கும் ஒலிக்கின்றன; |

[இப்படிப் பொழுது புலர்ந்தபோது 'நாங்களும் வந்து பாடுகிறோம், உன் காதில் ஒன்றும் விழவில்லையா?' என்று ஒரு தோழியை நோக்கிக் கூட்டத்தினருள் ஒருத்தி கூறப்போகிறாள்.]

| | |
|---|---|
| கேழ் இல் பரஞ்சோதி, | = ஒப்பற்ற பரம்பொருளாகிய சோதியினை, |
| கேழ் இல் பரங்கருணை, | = ஒப்பற்ற மேலான கருணை முதலிய |
| கேழ் இல் விழுப்பொருள்கள் | ஒப்பற்ற சிறந்த பொருள்கள் அமைந்த பாடல்களை |
| பாடினோம்; கேட்டிலையோ? | = நாங்கள் அனைவரும் பாடினோமே, காதில் விழவில்லையா? |
| வாழி, ஈது என்ன உறக்கமோ? வாய் திறவாய்; | = வாழ்வாயாக, இது எத்தகைய தூக்கமோ? உன் வாயையும் திறக்கின்றாயில்லை; |
| ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ? | = அருளின் சமுத்திரமாகிய சிவ பெருமானிடம் அன்பு செலுத்தும் நெறியும் இவ்விதம் தானோ? |
| ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை. | = (இனியாவது) யுக முடிவில் தலைவனாய்த் தான் ஒருவனே அழிவில்லாமல் நிற்பவனும், |
| ஏழை பங்காளனையே பாடு | = அம்மையாகிய உமாதேவியை ஒரு பாகத்தில் உடையவனும் ஆகிய பெருமானையே (எங்களுடன் கலந்து) பாடுவாயாக. |

[தங்களுடன் வந்து நின்றும் வாய் பேசாமல் இருந்தவளை நோக்கி ஒரு தோழி, 'இந்த ஆனந்தமான காலை வேளையிலும், இப்படியும் ஒருவகை உறக்கமா?—திருமாலின் அறிதுயில் போலே!' என்று கேட்பதுபோல் அமைந்திருக்கிறது இப்பாட்டு.]

## தெளிவுரை

'ஆனந்தமான காலைவேளையில் ஆனந்தமாக இறைவனைப் பாடுகிறோம், நீயும் பாடுவாய்' என்று கன்னியர் கூட்டத்தில் ஒருத்தி தோழி ஒருத்தியை நோக்கிக் கூறுகிறாள்.

'கோழி கூவப் பொழுது விடியும்' என்று சாதாரணமாய்ச் சொல்லுகிறார்களல்லவா? கோழி கூவ, அதைக் கேட்டு எல்லா இடங்களிலும் சிறு பறவைகள் ஒலிக்கின்றன என்கிறாள் இக் கன்னி. கோயில்களில் அதிகாலையில் முதலில் சங்கு முழங்குகிறது; இந்த முழக்கத்திற்குபின் நாகசுரம் வாசிக்கிறார்கள். எனவே. நாகசுரம் வாசிக்குமாறு சங்குகள் எங்கும் ஒலிக்கின்றன என்கிறாள் இப் பெண். இப்படி வருணிக்கிறாள் ஆனந்தமான காலைப்பொழுதை.

ஆனந்தத்துடன் ஆனந்தம் கலப்பதுபோல் கன்னியர் பாடல்களும் மேலே சொன்ன காலையொலிகளுடன் கலக்கின்றன. 'ஆனால் உன் காதில் இவ்வொலிகளில் ஒன்றும் விழவில்லையோ?' என்கிறாள்.

பாடல்கள் என்றால், இங்கே பொருள் பொதிந்த பாடல்கள். சாதாரணப் பொருள்களா? இறைவனது புகழ்ப்பாடல்களில் அமைந்திருக்கும் சிறந்த பொருள்கள் அல்லவா? இறைவனது பெருங்கருணைப் பண்பு முதலிய சிறந்த பொருள்களை இவர்கள் பாடுகிறார்கள். இப்படிப் பாடியும் 'கேட்டிலையோ?' என்று எவ்வளவு அனுதாபத்துடன் கேட்கிறாள்! 'இப்படியும் ஓர் உறக்கமா?' என்று அதிசயிக்கிறாள்.

'நீ எத்தகைய தீங்கும் நேராமல் வாழ்வாயாக!' என்று தோழியை வாயார வாழ்த்துகிறாள். அதே வாயால் 'ஈது என்ன உறக்கமோ? வாய்திறவாய்' என்கிறாள். பாடிய பாடலோ ஆண்டவனின் பொருள் சேர்ந்த புகழ்ப் பாட்டு; பாடின காலமோ ஆனந்தமான காலை; இடமோ பக்தமணியான ஒரு தோழியின் இல்லம். இப்படியெல்லாம் இருந்தும், தோழி கண் திறந்தாளே யன்றி வாய் திறந்தாளில்லை; மற்றவர்களோடு சேர்ந்து பாடினாளில்லை. இப்படியும் ஒருவகை உறக்கம் இருக்கக்கூடுமோ?

—என்ற அதிசயத்துடன்தான், 'ஈது என்ன உறக்கமோ? வாய் திறவாய்' என்கிருள்.

இறைவனே அருளின் பெருங்கடல்—'பரங்கருணைத் தடங் கடல்.' அவனிடம் அன்பை இப்படியா செலுத்துவது? ஊழி முதல்வனும் ஏழை பங்காளனுமாகிய ஒருவனை எங்களுடன் சேர்ந்து வாய்திறந்து பாடுவாய் என்று கூறி முடிக்கிருள்.

**குறிப்புகள் :**

**குருகு :** பொதுவாகப் பறவையைக் குறிக்கும் இச்சொல் இங்கே காக்கை முதலிய பறவைகளைக் குறிப்பிடுகின்றன.

**ஏழில்:** ஏழ்+இல்=ஏழு இடம்; ஏழு இசைகளைக் குறிக்கும். ஏழு இசைகளுக்கும் இடமாகிய இசைக் கருவியைப் பொதுவாகக் குறித்தபோதிலும், இங்கே நாகசுரம் என்ற துளைக்கருவி சிறப்பாகக் குறிக்கப்படுகிறது எனலாம்.

**கேழ் இல் :** கேழ்=ஒப்பு. 'ஈடும் எடுப்புமில்லாத' என்ற பொருளில் வருகிறது 'கேழ் இல்' என்பது.

**கேட்டிலையோ?** 'இறைவனது புகழ்ப் பாடலை நாங்கள் பாட நீ கேட்டாய்!' என்றுதான் இங்கே சொல்லுகிருள். ஓகாரம் எதிர்மறைப் பொருட்டு. கேட்காமல் இருக்கவில்லை; ஆனுல் கேட்டும் வாய் திறவாது சும்மா இருக்கிருய் என்கிருள்.

**ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாரே?** இங்கே 'ஆழி யான்' என்பதற்குத் திருமால் என்று பொருள் கூறுவதும் உண்டு. திருமாலும் சிவபக்தன் என்பது சைவர் கொள்கை. ஆனுல் திருமால் அறிதுயில் அமர்ந்திருப்பவன். அப்படியே இறைவனிடத்து அன்பு செய்யும் இத்தோழியும் அறிதுயில் புரி கின்ருளோ!—என்று பொருள் கூறுவதும் உண்டு.





# ௯

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே!
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே!
உன்னைப் பிரானாகப் பெற்ற உன் சீரடியோம்
உன்அடியார் தாள்பணிவோம்; ஆங்கவர்க்கே பாங்காவோம்;
அன்னவரே எம்கணவர் ஆவார்; அவர்உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம்;
இன்ன வகையே எமக்குஎம்கோன்! நல்குதியேல்,
என்ன குறையும் இலோம் ஏலோர் எம்பாவாய்.



3

[துயிலெழுந்து வந்திருக்கும் கன்னியர்கள் தங்களுக்கு நல்ல கணவர் வேண்டும் என்று இறைவனிடம் விண்ணப்பம் செய்து கொள்ளுகிறார்கள்.]

முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளே! = முற்பட்டனவாகிய பழைய பொருள்கள் எல்லாவற்றிற்கும் முற்பட்ட பழைய பொருளாக உள்ளவனே!

பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியனே! = பிற்பட்டனவாகிய புதுமைப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் மீண்டும் புதுமைப் பொருளாக இருப்பவனே!

உன்னைப் பிரானாகப் பெற்ற உன் சீர் அடியோம் = இத்தகைய உன்னைத் தலைவனாகக் கிடைக்கப் பெற்றதால் உன் சிறப்பு மிக்க அடியவர்களாகிய நாங்கள்

உன் அடியார் தாள் பணிவோம்; = உன் அடியாருடைய அடிகளை வணங்குவோம்;

ஆங்கு அவர்க்கே பாங்கு ஆவோம்; = அப்படியே உன் அடியவர்களுக்கே உரிமை உடையவர்கள் ஆவோம்;

அன்னவரே எம் கணவர் ஆவார்; = அத்தகைய அடியவர்களே எங்களுக்குக் கணவர் ஆவார்;

அவர் உகந்து சொன்ன பரிசே = அவர்கள் மனமுவந்து இட்ட கட்டளைப்படியே

தொழும்பாய்ப் பணி செய்வோம்; = அவர்களுக்கு அடிமைபோல் நின்று பணி புரிவோம்;

இன்ன வகையே எமக்கு எம்கோன் நல்குதியேல், = எங்கள் பிரானாகிய நீ எங்களுக்கு இங்ஙனமே அருள் புரிவாயானால்,

என்ன குறையும் இலோம். = எத்தகைய குறைபாடும் இல்லாதவராவோம்.

எழுப்பியவரும் எழுப்பப்பட்டவருமாகிய கன்னிப்பெண்கள் எல்லாரும் ஒருங்கே கூடி ஒருமுகமாய் இறைவனைப் புகழ்ந்து பாடி, இப்பாவைநோன்பின் ஒரு பயனுகத் தங்களுக்கு நல்ல கணவர்கள் வாய்க்கவேண்டும் என்று விண்ணப்பம் செய்து கொள்ளுகிறார்கள்.

இறைவன் பழமைக்கும் பழமையானவன், புதுமைக்கும் புதுமையானவன் என்ற அற்புதமான கொள்கை இப்பாட்டின் தொடக்கத்திலே வசிகரமாக வெளியிடப்பெறுகின்றது.

இத்தகைய இறைவனைப் பிராணுகப் பெற்றேமே என்று அதிலேயே பெருமை அடைகிறார்கள். 'சிறந்த தலைவனின் சிறந்த அடியவர்கள் நாங்கள்!' என்பதுதான் இவர்களுக்குப் பெருமை, இவர்களுக்குக் கிடைத்த பெரும் பேறு.

'உன் சீர் அடியோம், உன் அடியார் தாள் பணிவோம்' என்கிறார்கள். சிறந்த மெய்யடியாரை வணங்கும் பேறு இறை வணக்கத்தால் தங்களுக்குக் கிடைக்கும் பாக்கியம் என்பது இவர்கள் மனநிலை.

சிவனடியாரை வணங்குவதே அன்றி உடல் பொருள் ஆவி மூன்றையும் அவர்களுக்கே உரிமைப் படுத்துவோம் என்ற கருத்துடன் 'ஆங்கு அவர்க்கே பாங்கு ஆவோம்' என்கிறார்கள்.

அவர்களே தங்களுக்குக் கணவர் ஆக வேண்டும் என்று பிரார்த்தித்துக்கொள்கிறார்கள். இது பாவை நோன்பின் இரட்டை நோக்கங்களில் ஒன்று என்பர். மற்ற நோக்கம் மழை பெய்து நாடு செழிக்க வேண்டுமென்பது.

தங்கள் கணவர்களுக்கு அன்புமுறையில் அடிமைகள்போல் பணிசெய்ய விரும்புகிறார்கள். பொதுவாக உலகத்தில் அடிமை யாகப் பணிசெய்வதில் இன்பம் இல்லை, துன்பம்தான். ஆனல் இங்கே பணி அன்புப் பணி, ஆகவே இன்பப் பணி. வாழ்க்கை அன்புமயமாகிவிட்டால் பணி இன்பமயமாகிவிடும் என்ற குறிப்பை, 'அவர் உகந்து சொன்ன பரிசே...' என்ற இவர்கள்

வாக்கில் காண்கிறோம். இத்தகைய வாழ்க்கையில் குறை ஏ
பட வழியில்லை என்பது இந்த விண்ணப்பத்தின் முடிவுரை.

**குறிப்புகள் :**

'அன்பர் பணி செய்ய எங்களை ஆளாக்கிவிடுவாய்
இறைவா! அப்போது இன்பநிலைதானே வந்து அடையும்
என்பது இந்த விண்ணப்பத்தின் சாரம். இக்கருத்தை
வற்புறுத்துகிறது,

> 'அன்பர்பணி செய்யஎன்னை
> ஆளாக்கி விட்டுவிட்டால்,
> இன்பநிலை தானேவந்(து)
> எய்தும் பராபரமே!'

என்ற தாயுமானவர் வாக்கு.

இறைவனைப் பிரான் என்று உணர்ந்த உணர்வை மறவாம
வாழ விரும்பும் இப்பெண்கள், சிவபக்தர்களிடம் அன்பு செலுத்
வாழ்வதே பெருவாழ்வு என நன்குணர்ந்திருக்கிறார்கள். இ
லறத்தை நல்லறமாகப் புரிந்து முடிவில் சிவாநுபூதி உணர்வை
அடைய விரும்புகிறார்கள்.

**பங்கு :** இச்சொல்லுக்கு உரிமை என்பது பொருள். இ
பெண்களுக்கு உரிமை வேறு, கடமை வேறு என்பதில்லை.

**தொழும்பாய்ப் பணிசெய்வோம் :** ஆற்றல் இன்மையாலும்
அறிவு இன்மையாலும் பொருள் இன்மையாலும் ஒருவரு
கொருவர் அடிமையாகத் துன்ப வாழ்வு வாழ்வதை இவ்வுலகில்
காண்கிறோம். ஆனால் ஆண்டவனுக்கும் அடியாருக்கும் தொழு
பாய்ப் பணிசெய்வது பேரின்ப வாழ்வின் நினைவுக் குறி.





# 10

பாதாளம் ஏழினுங்கிழ் சொற்கழிவு பாதமலர்;
போதார் புனை முடியும் எல்லாப் பொருள்முடிவே!
பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன்;
வேதமுதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும்,
ஓத உலவா ஒருதோழன்; தொண்டர் உளன்;
கோதில் குலத்(து) அரன்-தன் கோயில் பிணாப்பிள்ளைகாள்!
ஏதவன் ஊர்! ஏதவன் பேர்? ஆர் உற்றார்? ஆர் அயலார்?
ஏதவனைப் பாடும் பரி(சு)? ஏலோர் எம்பாவாய்.

## பதவுரை

| | |
|---|---|
| கோதில் குலத்து | =குற்றமற்ற குலத்தினரும் |
| அரன்தன் கோயில் பிணைப் பிள்ளைகாள்! | =சிவபெருமான் திருக்கோயிலில் பணிபுரிவோரும் ஆகிய பெண் பிள்ளைகளே! |
| பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவு பாதமலர்; | =கீழ் உலகம் ஏழினுக்கும் (அதாவது ஏழு பாதாளங்களுக்கும் அடியிலுள்ளன) கீழ்ப்பட்டன, சொல்லுக்கு அடங்காத நிலையிலுள்ள பாதமலர்கள்; |
| போது ஆர் புனைமுடியும் | =பூக்களை அணிந்த திருமுடியும் |
| எல்லாப் பொருள் முடிவே; | =எப்பொருள்களும் முடிந்து நிற்கும் முடிவாக உள்ளது; |
| பேதை ஒரு பால் திருமேனி ஒன்று அல்லன்; | =உமாதேவியை ஒரு பக்கத்திலே கொண்டவன் ஒருவகைப்பட்ட திருமேனியை உடையவன் அல்லன்; |
| வேத முதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும் | =வேத முதல்வனாக விண்ணுலகத்தினரும் மண்ணுலகத்தினரும் புகழ்ந்து பாராட்டினாலும் |
| ஓத உலவா ஒரு தோழன்; | புகழ்ச்சி முற்றுப் பெறாத ஒப்பற்ற தோழன்; |
| தொண்டர் உளன்; | =தொண்டர்களின் உள்ளத்தில் கோயில் கொண்டிருப்பவன்; |
| ஏது அவன் ஊர்? ஏது அவன் பேர்? ஆர் உற்றார்? ஆர் அயலார்? | =அவனுக்கு ஊர் யாது? பேர் யாது? உற்றார் யார்? அயலா யார்? |
| ஏது அதனைப் பாடும் பரிசு? | =அவனைப் புகழ்ந்து பாடும் தன்மை யாத |

# தெளிவுரை

முந்திய திருப்பாட்டில் கன்னியர்கள் உறுதியாக விண்ணப்பம் செய்துகொண்டதை அறிந்தோம். இப்பாட்டிலே இவர்கள் தங்களுக்கு எதிரே வந்த திருக்கோயிற் பணிப்பெண்களைச் சந்திக்கிறார்கள். இறைவனுடைய உண்மை இயல்பு குறித்துக் கேட்கிறார்கள். கோயிலிலுள்ள பணிப்பெண்கள் இறைவனிடம் அணுக்கம் (நெருங்கிய தொடர்பு) உடையவர்கள் எனக் கருதுகிறார்கள்.

அன்பர்கள் கூட்டம் ஒன்று வேறொரு அன்பர் கூட்டத்தைச் சந்திக்கிறது. அதாவது, கன்னியர்களின் கூட்டம் கோயிற் பணிப்பெண்களின் கூட்டத்தைச் சந்திக்கிறது. அன்பர்கள் எதிர்ப்படும் அன்பர்களைத் தங்களைக் காட்டிலும் மிக்கார் எனக் கருதி வினவுகிறார்கள். சிறுமிகள் அனுபவமுள்ளவர்களை வினவுகிறார்கள் என்றும் கொள்ளலாம்.

கோயிற் பணிப்பெண்கள் குற்றமற்ற குலத்தினராகக் குறிக்கப்படுகிறார்கள். ‘குலம்’ இங்கே சிறப்பு அல்லது நலம் என்று பொருள்படுகிறது. குற்றமற்ற நன்மையுள்ள தொண்டரினத்தைச் சார்ந்தவர்கள் இப்பணிப்பெண்கள் என்பது பொருள்.

‘பிணாப்பிள்ளைகள்’ என்றால் பெண் பிள்ளைகள். ‘பெண்ணும் பிணாவும் மக்கட்கு உரிய’ என்பது தொல்காப்பிய மரபியல் சூத்திரம். ‘பிணா’ என்பது உயர்திணைப் பெண்பால் மரபுப் பெயர்.

கோயிற் பணிப்பெண்களைக் கண்டதும் கன்னியர்கள் இறைநிலையைத் தெளிவுபடுத்திக்கொள்ளவிரும்புகிறார்கள். இறைவனது எல்லையற்ற நிலையை முதலில் குறிப்பிடுகிறார்கள். இறைவனது திருமுடி எல்லாப் பொருள்களையும் கடந்தது என்று கூறுவதற்கு முன்பே அவனுடைய அருளுக்கு அறிகுறியான திருவடிகள் கீழுலகங்களுக்கும் கீழாக உள்ளன என்கிறார்கள்.

சிவபெருமான் உமாதேவியை ஒரு பங்கில் உடையவனாதலின், அவன் ஒருவகைப்பட்ட திருமேனியை உடையவன் அல்லன் என்கிறார்கள். இறைவன் திருமேனியை ஆணுரு அல்லது பெண்ணுரு

என்னும் இரண்டில் ஒன்றாகக் கூறமுடியாததால், 'திருமேனி ஒன்றல்லன்' என்கிறார்கள்.

அம்மையப்பனாகிய பெருமானை ஒருவன் என்றோ, ஒருத்தி என்றோ கூற இயலாது என்பதைக் குறிப்பிட்டபின், விண்ணும் மண்ணும் எப்படித் துதித்தாலும் அப்புகழுரைகள் அளவிட்டு உரைக்க முடியாத பெருமை வாய்ந்தவன் என்கிறார்கள். அவ்வளவு பெருமை வாய்ந்த இறைவன் ஒரு தோழனாகத் தொண்டர்களின் உளக்கோயிலில் அமர்ந்து அருள் புரிகின்றான் என்று சொல்லிவிட்டு, எதிரே வந்த கோயிற் பணிப்பெண்களிடம், அவனுக்கு உரிய ஊர், பேர், உற்றார், அவனுக்கு அயலார், அவனைப் பாடும் பரிசு ஆகிய விவரங்களைக் குறித்த செய்திகளை வினவுகின்றனர்.

**குறிப்புகள் :**

இத்திருப்பாட்டின் இறுதிப் பகுதியில் வரும் வினாக்களுக்கு, முதல் மூன்று அடிகளிலேயே (இக் கன்னிப் பெண்களின் வாக்கிலேயே) விடைகள் அமைந்திருக்கின்றன. இது பாட்டின் தனிச் சிறப்பான நயம்.

**ஒரு தோழன் தொண்டருளன் :** ஒரு தோழம் தொண்டருளன் என்று பாடங்கொள்வது மிகவும் பொருத்தமாகும். 'தோழம்' என்பது பேரெண் (பெரிய எண்). ஒப்பற்ற மிகுதியான தொண்டரை உடையவன் என்பது பொருள். 'தோழ'த்திற்கு இப் பொருள் உண்டு என்பதற்கு 'ஒரு தோழம் தேவர் விண்ணிற் பொலிய' என்ற தேவார வாக்கைச் சான்றாகக் காட்டலாம்.

**ஊர் பேர் முதலியன :** ஒரு பெயரோ, உருவமோ, ஊரோ இல்லாத பரம்பொருளை ஆயிரம் அழகிய பெயர்களால் போற்றுகிறார்கள் பக்தர்கள்.





# 11

மொய்யார் தடம்பொய்கை புக்கு, முகேர்என்னக்

கையால் குடைந்து குடைந்(து), உன் கழல்பாடி,

ஐயா வழி அடியோம் வாழ்ந்தோம்காண்; ஆரழல்போல்

செய்யா! வெண் ணீருடி! செல்வா! சிறுமருங்குல்

மையார் தடங்கண் மடந்தை மணவாளா!

ஐயா! நீ ஆட்கொண் டருளும் விளையாட்டின்,

உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்;

எய்யாமல் காப்பாய் எமைஏலோர் எம்பாவாய்.

[கோயிற் பிறைப் பிள்ளைகளான முறியவர்களுடன் உரையாடியபின், கன்னிப் பெண்கள் எல்லோரும் நீராடத் தொடங்கி இறைவனை நோக்கித் தங்களுக்குக் காப்பு வேண்டும் (எங்களைக் காத்தருள வேண்டும்) என்கிறார்கள்.]

| | |
|---|---|
| ஐயா! | =தலைவனே! |
| அழல் போல் செய்யா! | =நிறைந்த தீயை ஒத்த செம்மை நிறம் வாய்ந்தவனே! |
| வெண்ணீறு ஆடி! | =வெண்மையான திருநீற்றை நிறைய அணிந்திருப்பவனே! |
| செல்வா! | =எங்கள் செல்வமாகிய சிவபுரத்து அரசே! |
| சிறு மருங்குல் மை ஆர் தடங் கண் மடந்தை மணவாளா! | =சிறிய இடையையும் மை தீட்டப் பெற்ற அகன்ற கண்களையும் உடைய உமாதேவியின் கண வனே! |
| மொய் ஆர் தடம் பொய்கை புக்கு, | =வண்டுகள் நிறைந்த அகன் திருக்குளத்தில் புகுந்து. |
| முகேர் என்னக் கையால் குடைந்து குடைந்து, | =‘முகேர்’ என்று ஒலி உண்டாகு படி கையினால் இறைத்து முழு |
| உன்கழல் பாடி, | =உன் திருவடிகளைப் புகழ்ந்துபா |
| வழி அடியோம் வாழ்ந்தோம் காண்; | =வழிவழி அடியவராகிய நாங் (வாழையடி வாழை என வ தொண்டர்களாகிய நாங்கள்) வாழ்வு எய்தப் பெற்றோம்; |
| ஐயா நீ ஆட்கொண்டருளும் விளையாட்டின், | =ஆண்டவனாகிய நீ உயிர்களை கொண்டு காத்தருளும் திருவ யாட்டினால், |
| உய்வார்கள் உய்யும் வகை எல்லாம் | =உய்தி பெறுகிறவர்கள் உ வகைகள்எல்லாவற்றாலும்(உ போகும் அன்பர்கள் உ பயன் அடையும் வகைகள் எ வற்றாலும்) |
| உய்ந்தொழிந்தோம் | =நாங்கள் பிழைத்துவிட் (ஈடேறிவிட்டோம்.) |
| எய்யாமல் காப்பாய் எமை. | =இனி, நாங்கள் களைத்து படி எம்மைக் காத்து வருவ |

ஆண்டவனே! இதுவரை நாங்கள் எல்லா வகையாலும் உன்னுடைய திருத்தொண்டில் நழுவாமல் ஈடுபட்டு உய்ந்தோம். இனி உன் அருட்பேற்றினால் ஆகும் பயனை அடைவதற்கு நாங்கள் சலித்துப் போகாமல் தொடர்ந்து (நிலைநிற்குமாறு) எங்களைக் காத்தருள வேண்டும் என்கிறார்கள். மார்கழி நோன்பில் நீராடுவதற்கு ஒருவகைக் காப்பாக அமைகின்றது,

‘எய்யாமல் காப்பாய் எமை’

என்று முற்றுப்பெறும் இப்பாட்டு.

குறிப்பு :

**மொய் ஆர் :** மொய்=(இங்கே) வண்டு, ஆர்=நிறைந்த. பூக்கள் நிறைந்த பொய்கையானதால் வண்டுகள் நிறைந்து மொய்ப்பதைக் குறிப்பிடுகிறார். மொய்த்தல் தொழில்பற்றி வண்டுக்கு ‘மொய்’ என்று பெயர் வந்தது.

**முகேர் :** கையால் நீரைக் குடைந்து குளிக்கும்போது உண்டாகும் ஒலிக் குறிப்பு ‘முகேர்’ என்பது. இது நீர் விளையாட்டு நிகழ்வதைக் குறிப்பிடுகிறது. பெண்கள் ஆனந்தமாக நீந்தி விளையாடியும், கையால் நீரைத் தட்டி இறைத்து முழுகியும் நீராடுகிறார்கள். நீராடும்போது எல்லாரும் சேர்ந்து இறைவனது திருவடிகளைப் புகழ்ந்து பாடிக்கொண்டிருக்கிறார்கள்.

**வாழ்ந்தோம் :** நினைத்தபடி மார்கழி நீராடுவதற்கு உரிய நேரத்தில் எழுந்து வாயார இறைவனைப் புகழ்ந்து பாடி ஆனந்தமாய் நோன்பின் பகுதியாக நீராடக் கிடைத்ததே என்று அந்தப் பாக்கியம் குறித்து உவகை கொள்ளுகிறார்கள். இந்த உவகை அல்லது மகிழ்ச்சியைத் தெரிவிக்கும் உவமைமொழிதான் ‘வாழ்ந்தோம்’ என்பது.

**ஆர் அழல்போல் செய்யா!** நெருப்பின் நிறமாகிய சிவப்பைச் சிவனது திருமேனிச் செந்நிறம் என்பர். ‘பொங்கு அழல் உருவன்’ என்று சிவபெருமானைக் கூறுவதுண்டு. சிவந்த மேனிய

கேசச் 'செய்யன்' எனலாம். செய்யா!—செந்நிறத் திருமேனி உடையவனே! செந்நிற மேனியில் வெண்ணீறு அணிந்திருக்கிறான் இறைவன். வெண்மை, தூய்மை குறிப்பது. ஆடுகிறவனே! (அண்மை விளி.)

**செல்வா :** இங்கே, செல்வம் மோட்ச சுகானுபவத்தைக் குறிக்கும்; தமிழில், வீட்டுத்திரு. இதை அடுத்து 'மடந்தை மணவாளா!' என்று வருவது கவனிக்கத் தக்கது. யோகியும் போகியுமாக இருக்கிறான் ஆண்டவன் என்பது குறிப்பு.

**பொய்கை:** இயற்கை நீர்நிலையைப் 'பொய்கை' என்கிறோம். இந்த நீர்நிலை இயற்கை வளத்தோடு கூடியது என்பதை 'பொய் ஆர் தடம் பொய்கை' என்ற சொற்றொடர் இனிது விளக்குகிறது.

**ஐயா நீ :** ஐயனாகிய நீ, அதாவது தலைவனாகிய நீ என்று பொருள் கொள்வது பொருந்தும்.

**ஆட்கொண்டருளும் விளையாட்டு :** உணர்ச்சி மையலினால் கட்டுண்டபோது அதனை நீக்குவது ஆட்கொள்ளும் முறை. பக்குவம் காரணமாக அவரவரை ஆட்கொள்ளும் வகைகள் பலவாகும். ஆட்கொள்ளுதலை 'விளையாட்டு' என்று குறிப்பிடுவது கூர்ந்து நோக்கத்தக்கது. 'யான், எனது' என்ற செருக்கு, பல பிறவிகளிலும் நாம் ஈட்டி வளர்த்துக் கொண்டிருப்பதாகும். இதை நம் முயற்சியால் ஒழிப்பது சாத்தியமன்று. அருளாளனாகிய ஆண்டவன், விளையாட்டாகப் பாச உணர்ச்சியைப் போக்கிவிடுகிறான். முயற்சி இன்றி எளிதில் காரியம் செய்யும் ஆற்றல்தான் இங்கே 'விளையாடல்' என்று குறிக்கப்படுகிறது.

**எய்யாமல் காப்பாய் :** எய்தல்=மெலிவுபடுதல், இளைத்துக் களைத்துப் போவது.



# 12

ஆர்த்த பிறவித் துயர்கெட, நாம் ஆர்த்தாடும்
தீர்த்தன், நற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடும்
கூத்தன், இவ் வானும் குவலயமும் எல்லோமும்
காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி,
வார்த்தையும் பேசி, வளைசிலம்ப, வார்கலைகள்
ஆர்ப்பரவஞ் செய்ய, அணிகுழல்மேல் வண்டார்ப்ப,
பூத்திகழும் பொய்கை குடைந்(து), உடையான் பொற்பாதம்
ஏத்தி, இருஞ்சுனைநீர் ஆடேலோர் எம்பாவாய்.

[கன்னியர்களின் கூட்டம் இறைவனைப் புகழ்ந்து திருவடி ஏத்திச் சுனைநீர் ஆடுகிறது. புகழ்ந்து புகழ்ந்து பாடுகின்ற உணர்ச்சியிலே நின்று இனிமை பெற நீராடுகிறார்கள்.]

ஆர்த்த பிறவித் துயர்கெட, =வினைப்பயன்களை நுகர வந்த பிறவியாகிய துயரம் கெடும்படி,

நாம் ஆர்த்து ஆடும்தீர்த்தன்; =நாம் அனைவரும் ஒலித்து மகிழ்ச்சியோடு ஆடுதற்கு அமைந்த தூய நீர் வடிவம் ஆனவனும்,

நல் தில்லைச் சிற்றம் பலத்தே தீயாடும் கூத்தன், =நன்மை பயக்கும் தில்லையிலுள்ள சிற்றம்பலம் என்ற ஞானசபையில் தீயைக் கையில் ஏந்தி ஆடுகின்ற ஆனந்தக் கூத்தனும்,

இவ்வானும் குவலயமும் எல்லோமும் காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி, =சுட்டி அறியப் படுவதான வானத்தையும் நிலஉலகத்தையும் மற்ற எல்லாப் பொருள்களையும் காத்தும், படைத்தும், ஒடுக்கியும் திருவிளையாடல் புரிகின்றவனும்(ஆகிய சிவபெருமானது)

வார்த்தையும் பேசி, =வார்த்தையும் ஓதி (செய்தியைப் பேசி),

வளைசிலம்ப, =வளையல்கள் ஒலிக்கவும்,

வார்கலைகள் ஆர்ப்பு-அரவம் செய்ய, =நீண்ட மேகலைகள் மிக்க ஒளியை உண்டாக்கவும்,

அணிகுழல் மேல் வண்டு ஆர்ப்ப, =மலர்கள் அணிந்த கூந்தலின்மேல் வண்டுகள் களித்து ஒலிக்கவும்,

பூத்திகழும் பொய்கை குடைந்து, =பூம்பொய்கையிலே (தாமரை மலர்கள் திகழ்கின்ற பொய்கையிலே) முழுகி,

உடையான் பொற்பாதம் ஏத்தி, =நம்மை உடைய இறைவனது அழகிய திருவடிகளைப் போற்றி,

இருஞ்சுனை நீர்ஆடு, =பெருமையும் தண்மையும் பருகுதற்குத் தகுதியும் உடைய சுனை நீரில் நீராடுவோமாக.

முந்திய திருப்பாட்டில் தங்களைச் சோர்விலாது காத்தல் வேண்டும் என்று ஆண்டவனை வேண்டிக்கொண்ட கன்னியர்கள், இப்பாட்டிலே அவனது கருணையைப் பாராட்டி நீராட நினைவு கொள்கிறார்கள், வளைகள் கலகலென, மேகலைகள் சலசலென, கூந்தல்மீது வண்டுகள் ரீங்காரம் செய்ய, ஆனந்தமாக நீராடுவோம் என்கிறாள், கன்னியர் கூட்டத்தில் ஒருத்தி மற்றொருத்தியை நோக்கி.

நம்மைப் பிடித்துப் பிடிப்பது பிறவித்துயர்; வினைப்பயன்களை நுகர்விக்க வருகிறது பிறவி. இத்துயரம் கெடுவதற்காக இறைவனது அருட்புகழ் குறித்து உரையாடி உவகையுடன் நீராடுவோம் என்கிறாள்.

இறைவனை இத்திருப்பாட்டில் 'தீர்த்தன்' என்றும், தியாடும் கூத்தன் என்றும், காத்தும் படைத்தும் ஒடுக்கியும் திருவிளையாடல் புரிபவன் என்றும் குறிப்பிடுவதைக் காண்கிறோம். நீராடும் இன்பத்திற்கும் குறைவில்லை; வீணாக வார்த்தையாடாமல் இறைவனுடைய வார்த்தை பேசும் ஆனந்தத்திற்கும் குறைவில்லை. பெண்களின் மகிழ்ச்சி-ஆரவாரத்திற்கும் குறைவில்லை.

**குறிப்புகள்:**

**தீர்த்தன்:** துயர்கெடத் தூய்மை வேண்டும். கள்ளமிலா உள்ளம் கடவுளைக் காணுமென்பர். அகத்தூய்மை இன்றியமையாதது. புறத்தூய்மையும் அவசியமானதே. புறத்தூய்மை நீரால் அமையும் என்பது பிரசித்தம். எனவே இந்த நீர்நிலையில் ஆரவார மகிழ்ச்சியுடன் நீராடுவோம் என்கிறார்கள். இவர்கள் ஆரவாரித்து ஆடும் (ஆர்த்து ஆடும்) தீர்த்தம் தூயதெளிந்த நீரை உடையது. இத்தூயநீர் தூய்மை செய்யம் இறைவனின் ஒரு வடிவமே. தீர்த்தத்தின் வடிவமான இறைவனைத் தீர்த்தன் என்கிறார். 'சென்று ஆடு தீர்த்தங்கள் ஆனார்தாமே' என்பது தேவாரம், புறததூய்மை தீர்த்தத்தால் அமைவதுபோல் அகத்தூய்மை இறைவனது குளிர்ந்த நல்லருளால் அமையும் என்பதை

வினையூட்டுகிறது 'தீர்த்தன்' என்ற சொல். தீர்த்தம்போல் தூய்மை செய்வதுடன் அன்பர்களுக்குக் கள்ளமிலாக் குழந்தையுள்ளமும் மகிழ்ச்சியும் தருகிறான் தீர்த்தன்.

**தீயாடும் கூத்தன்:** தீர்த்தன் என்று சொன்ன வாயால் தீயாடும் கூத்தன் என்று கூறுவதும் கவனிக்கத் தக்கது. ஏதோ முரண்பாடு போல் தோன்றுகிறதல்லவா? அக இருளைப்போக்கும் ஞானமாகிய தீயை நினைத்துக்கொண்டு பனிக்காலத் தொடக்கத்தில் குளிரை மறந்து நீராடுகிறார்கள். தீயைக்கையில் ஏந்தி ஆடுகிறான் நடராஜப் பெருமான் என்பது கூர்ந்து சிந்திக்கத் தக்கது.

நற்றில்லைச் சிற்றம்பலம்; சிறந்த தூய அழகிய நன்மை பயப்பதால் நற்றில்லை எனப்பட்டது. அக இருளை நீக்கும் ஞானவெளியே அரங்கமாகக் கொண்டு ஆடுகிறான் ஆனந்தக் கூத்தன். இந்த ஞானவெளியை வடமொழியில் சித்ஸபை என்பர். சித்ஸபை= சிற்றம்பலம். 'இருள் கிழிய...எரி ஆடும்' பெருமானின் புகழை அப்பரின் தமிழ் மறையில் காணலாம்.

**ஆடும் கூத்தன்:** உலகம் யாவும் இறைவனைப் பற்றி நிற்கின்றன. 'தான் ஆடத் தசை ஆடும்' என்பதுபோல் இறைவன் இயங்க உலகங்கள் இயங்குகின்றன. எனவே என்றும் நீங்காத கூத்தை இறைவன் இயற்றுகின்றான் என்பர்.

'யாவையும் ஆடிடும்
எம்இறை ஆடவே'

என்பது திருமூலர் திருவாக்கு. இக்கூத்தை 'ஆனந்த எல்லையில் தனிப்பெருங்கூத்து' என்கிறார் சேக்கிழார் பெருமான்.

**விளையாடி:** இதற்கு விளையாடுபவன் என்று பொருள்; இகர ஈற்று வினைப்பெயர்.





# 13

பைங்குவளைக் கார்மலரால், செங்கமலப் பைம்போதால்

அங்கம் குருகினத்தால், பின்னும் அரவத்தால்,

தங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினல்,

எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்(று) இசைந்து

பொங்கு மடுவில் புகப்பாய்ந்து பாய்ந்து, நம்

சங்கம் சிலம்பிச் சிலம்பு கலந்தார்ப்பக்

கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்

பங்கயப் பூம்புனல்பாய்ந்(து) ஆடேலோர் எம்பாவாய்.

## பதவுரை

| | |
|---|---|
| பைங்குவளைக் கார்மலரால், | =குளிர்ந்த குவளையாகிய கரிய மலர்களாலும் |
| செங்கமலப் பைம்போதால், | =சிவந்த தாமரையாகிய அழகிய மலர்களாலும் |
| அம் கம் குருகு இனத்தால், | =அழகிய நீரில் உள்ள பறவைக் கூட்டங்களாலும் (அழகிய நீர்வாழ் பறவைகளாலும்) |
| பின்னும் அரவத்தால், | =பின்னி எழும் அலை ஒலிகளாலும், |
| தங்கள்...சார்தலினால் | =(மடுநீராகிய) தம்மிடத்து அழுக்கைக் கழுவ நினைப்பவர்கள் வந்து அடைதலினாலும் |
| எங்கள்...இசைந்த | =எங்கள் அம்மையாகிய உமா தேவியும் எங்கள் தலைவனாகிய சிவபெருமானும் ஒத்து இசைந்திருக்கும் |
| பொங்கும்...பாய்ந்து | =நீர் நிறைந்து பொங்கும் பொய்கையில் புகுந்து பாய்ந்து பாய்ந்து |
| நம் சங்கம் சிலம்ப | =நம் கைவளையல் ஒலிக்கவும் (நம் முன்கையிலுள்ள சங்கு வளையல்கள் ஒலிக்கவும்,) |
| சிலம்பு கலந்து ஆர்ப்ப | =பாதச் சிலம்புகளும் அந்த வளையல்களின் ஒலியோடு கலந்து ஒலிக்கவும் |
| கொங்கைகள் பொங்க, | =கொங்கைகள் குலுங்கவும் |
| குடையும் புனல்பொங்க | =நீராடுவதற்கு உரிய நீர் பொங்கி மேலெழவும், |
| பங்கயப்...பாய்ந்(து) ஆடு | =தாமரைப் பொய்கையின் அழகிய நீரில் பாய்ந்து நீராடு. |

பொய்கை உமை அம்மையும் சிவபெருமானும் இசைந்து விளங்குவதுபோலத் திகழ்கிறது என்கிறார் மாணிக்கவாசகர். குளிர்ந்த கருங்குவளை மலர் அருள் நிறைந்த நீலமேனியுள்ள அம்மையை நினைவூட்டுகிறது.

**அங்கம் குருகினத்தால் :** அழகிய நீர்வாழ் பறவைகள் பொய்கையில் காணப்படுகின்றன. 'அம் கம் குருகு இனத்தால்' என்று பிரித்து இப்பொருள் கொள்ள வேண்டும். இது பிராட்டிக்கு எப்படிப் பொருந்தும்? 'அங்கம் குருகு இனத்தால்' என்று பிரித்துப் பொருள் கொள்ளும்போது, கையில் வளையல்களை உடைய பிராட்டியைக் குறிப்பிடுவதாகும். அங்கம் என்றால் உறுப்பு; இங்கே கையைக் குறிக்கும். குருகு=வளையல். குருகு இனம்=வளையல்களின் கூட்டம்.

**பின்னும் அரவத்தால் :** பொய்கையைக் குறிக்கும்போது, 'பின்னும் அரவம்' பின்னி எழும் அலைகளின் ஒலியைக் குறிப்பதாகத் தெரிந்து கொண்டிருக்கிறோம். சிவபெருமானைக் குறிக்கும் போது 'பின்னும் அரவம்' பின்னிக் கிடக்கின்ற பாம்புகளாகிய அணிகளைக் குறிக்கும். பாம்புகளை அணிகளாக உடையவன் சிவபெருமான் என்பது பிரசித்தம்.

**தம் கண் மலம் கழுவுவார் வந்து சார்தலினால் :** பொய்கை நீரில் அழுக்கைக் கழுவ மக்கள் வருவார்களல்லவா? நீராகிய தம் இடத்து என்று 'தம்கண்' பொருள்படுவதாக அறிந்துகொண்டிருக்கிறோம். நீரைத் 'தம்' என்று பன்மையில் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. 'வடமொழி மதம் பற்றி (கொள்கை பற்றி)த் தம் என 'நீர்' பன்மையாகக் கூறப்பட்டது' என்பது கதிர்மணி விளக்கப் பேருரை.

**தங்கள் மலம் கழுவுவார் :** இப்படியும் பதப் பிரிவு கொள்ளலாம். தம்முடைய அழுக்கைப் போக்குவார் என்பது பொருள்.

**மலம் :** ஆணவம் முதலிய அக அழுக்குகளையும் 'மலம்' என்ற சொல் குறிப்பிடுகிறது. இந்த அழுக்குகளைப் போக்க

விரும்புவோர் அம்மையப்பனைச் சரணமாக அடைவார்கள். எனவே, பொய்கை பிராட்டியும் பெருமானும் போன்று இசைந்திருப்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

**சங்கம் :** சங்கால் செய்த வளையலை உணர்த்துவதுடன், வேறு வளையல்களையும் உணர்த்தும்.

**சிலம்பு கலந்து ஆர்ப்ப :** பாதச் சிலம்பொலி கைவளையல்களோடு கலந்து ஒலிக்கும் என்று கூறுவதிலிருந்து, பொய்கைக் கரையிலுள்ள பெண்கள் அங்கிருந்து சிலம்பு ஒலிக்க நீர் இருக்கும் இடத்திற்கு வருகிறார்கள் என்றும், நீரில் பாய்ந்து குதிக்கும் போது இவர்களுடைய கைவளையல்களும் கலந்து ஒலி செய்கின்றன என்றும் ஊகம் செய்துகொள்ள வேண்டும்.

**கொங்கைகள் பொங்க :** பெண்களின் உள்ளக் கிளர்ச்சியும் பூரிப்பும் இங்கே குறிக்கப்படுகின்றன எனலாம்.

**குடையும் புனல் பொங்க :** பெண்கள் நெருங்கிப் பாய்ந்து நீராடும்போது தண்ணீர் அதன் அளவிற்கு மேலே பொங்கி எழுந்தது என்பது பொருள். பொய்கை வெள்ளமும் பொங்குகிறது; இவர்களது உணர்ச்சியுள்ளமும் பொங்குகிறது.

முந்திய பாட்டிலே, இறைவனது புகழ்பாடி நீராடுவதற்கு ஒருப்பட்ட பெண்களைக் கண்டோம்; இப் பாட்டிலே, அவர்கள் தாம் நீராடப் புகுந்த பொய்கை உமாதேவியையும் சிவபெருமானையும் நினைவூட்டுகிறது என்பதை உணர்ந்துகொள்ளுகிறார்கள்.

குவளை மலர் உமை அம்மையின் திருமேனி வண்ணத்தை நினைவூட்டுவதுடன், சிவபெருமானது நீல கண்டத்தையும் ஞாபகப்படுத்துகிறது. தாமரை மலர், திருமுகங்களுக்கு உவமையாகும்.

**பூம்புனல்** அழகோடு தூய்மையையும் குறிக்கும்.



காதார் குழையாட, பைம்பூண் கலனாட,

கோதை குழலாட, வண்டின் குழாமாட,

சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி,

வேதப் பொருள்பாடி, அப்பொருளா மாபாடி,

சோதி திறம்பாடி, சூழ்கொன்றைத் தார்பாடி,

ஆதி திறம்பாடி, அந்தமா மாபாடி,

பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்

பாதத் திறம்பாடி ஆ(டே)லோர் எம்பாவாய்.

| | |
|---|---|
| காது ஆர் குழை ஆட, | =காதுகளில் அணிந்துள்ள குழைகள் (தோடுகள்) ஆட, |
| பைம் பூண் கலன் ஆட, | =(உடம்பில் அணிந்த வேறு) அழகிய அணிகலன்கள் ஆட, |
| கோதை குழல் ஆட, | =கூந்தலில் (குழல்) அணிந்த மாலைகள் (கோதை) ஆட, |
| வண்டின் குழாம் ஆட, சீதப் புனல் ஆடி, | =வண்டுக்கூட்டம் எழுந்து சுழல, குளிர்ந்த நீரில் முழுகி, |
| சிற்றம்பலம் பாடி, | =ஞானசபையைப் புகழ்ந்து பாடி, |
| வேதப் பொருள் பாடி, | =வேதப்பொருள் அமைந்த புகழ்ப் பாடல்களைப் பாடி, |
| அப்பொருள் ஆமா பாடி, | =(இறைவன்) அப்பொருளாகத் திகழ்வதைப் பாடி, |
| சோதி திறம்பாடி, | =ஒளி வடிவாக உள்ள (அப்பெருமாளின்) மேன்மையைப் பாடி, |
| சூழ் கொன்றைத் தார்பாடி, | =(சிவபெருமான் தன் அடையாள மாலையாகச்) சுற்றி அணிந்த கொன்றைமலர் மாலையைப் புகழ்ந்து பாடி, |
| ஆதி திறம் பாடி, | =அப்பெருமான் எப்பொருளுக்கும் ஆதியாகவுள்ள தன்மையைப் பாடி, |
| அந்தம் ஆமா பாடி, | =அந்தம் ஆகுமாறு (யாவர்க்கும் எவற்றிற்கும் முடிவிடம் ஆகின்ற தன்மையைப்) பாடி, |
| பேதித்து நம்மை, | =நம்மைப் பேதித்து, அதாவது உயிர்களாகிய நம்மை வேறு படுத்தி |
| வளர்த்து எடுத்த பெய்வளை தன், | =சிவஞானம் ஊட்டிப் பாதுகாத்து ஆட்கொண்ட, வளையல்கள் அணிந்த கைகளையுடைய, உமை அம்மையின், |
| பாதத் திறம்பாடி ஆடு. | =திருவடி மாண்பையும் பாடி நீராடுவோமாக. |

## தெளிவுரை

முந்திய பாட்டில், கன்னியர்கள் பொய்கையில் பாய்ந்து நீராடத் தொடங்கியதைக் கூறினார் மணிவாசகப் பெருமான். இப்பாட்டிலே அவர்கள் நீர்நிலையில் புகுந்து நீராடும் முறையில் நிகழ்வனவற்றைக் குறிப்பிடுகிறார், 'காதார் குழையாட' என்று தொடங்கி, முதலில் நீராடுவதற்கு ஏற்றமுறையில் எழுந்து நின்று நீரில் பாயத் தொடங்கியவுடன் காதுகளில் தோடுகள் ஆடின என்கிறார்.

நீர்நிலைக்கு விரைந்து செல்லும்போது கன்னியர்கள் உடம்பில் அணிந்திருந்த வேறு அணிகலன்களும் அசைந்து ஒலித்தன என்கிறார். தலை அசையவே கூந்தலும் அசைந்தது என்கிறார். கூந்தல் ஆடவே அதில் விளங்கிய மலர்மாலைகளும் சேர்ந்து அசைந்தனவாம். மலர்மாலைகளிலுள்ள வண்டின் கூட்டங்களும் எழுந்து சுழன்றனவாம்.

இந்த நிலையில் குளிர்ந்த புனல் ஆடினார்கள். பனிக்காலத்து அதிகாலைப் பொழுதில் நீர் மிக்க குளிர்ச்சியுடன் இருப்பதால் 'சீதப்புனல்' என்றார். பிறவிடவெப்பம் தீர முயல்பவர்கள் இவர்கள் என்ற குறிப்பையும் இங்கே காண்கிறோம்.

நீர்விளையாட்டு நிகழ்ச்சியில் இறைவனையும் மறக்கவில்லை, இறைவியாகிய தேவியையும் மறக்கவில்லை. இறைவனைப் பாடினார்கள் என்பதைக் குறிப்பிடும்போது, முதலில் தில்லைத் திருச்சிற்றம்பலத்தைப் பாடினார்கள் என்கிறார். சிற்றம்பலம், சூட்சும ஞானப் பரவெளி. எங்கும் நிறைந்த இறைவன் சிற்றம்பலம் முதலான தலங்களில் எப்படிப் புலப்படுகிறான் என்பதை உபமானம் மூலமாக விளக்க முயல்வதுண்டு. பசுவின் உடல் முழுதும் நிறைந்த பால் கன்றின் பொருட்டு வெளிப்படுவதற்கு அது சுரக்கும் உறுப்பு இசைந்த இடமாகிறதல்லவா? அப்படியே எங்கும் நிறைந்த தெய்வ அருள் அன்பர்களாகிய கன்றுகளின் பொருட்டுச் சுரந்து வெளிப்படுவதற்கு உரிய இடம் தில்லைச் சிற்றம்பலம் போன்ற தலம் ஆகும் என்பர்.

'சிற்றம்பலம் பாடி' என்று தொடங்கி 'அந்தம் ஆமா(று) பா என்பது வரையுள்ள பாடற்பகுதி, இறைவனைப் பாராட்டி பாடினர் என்பதைக் குறிக்கிறது. அப்பால் 'பேதித்து...பாத திறம்பாடி' என்ற பகுதி இறைவியைப் புகழ்ந்து பாராட்டி பாடினர் என்பதைக் குறிப்பிடுகிறது.

வேதம்பாடி என்று கூறுமல் 'வேதப்பொருள் பாடி' என்கிற வேதப்பொருளை அமுது ஒழுகுகின்ற இசைத் தமிழாக இசைத்து பாடினர் என்பது குறிப்பு. 'அப்பொருள் ஆமா(று) பாடி'னர்க என்று கூறுவதில், சிவபெருமான் அப்பொருள் ஆகிய விதத்தை பாராட்டிப் பாடினர் என்ற கருத்து இனிது புலப்படுகிறது.

**குறிப்புகள்:**

சிற்றம்பலம், வேதப்பொருள், அப்பொருள் ஆமாறு, சோதி திறம், கொன்றை மாலை, ஆதிதிறம், அந்தம் ஆமாறு என்று ஏழுவித மாக இறைவனைப் பாராட்டியதைக் கூறியபின், 'பெய்வளை தன் பாதத்திறன்' என்று உமாதேவியினது திருவடிகளின் பெருமை யையும் பாடி நீராடுவோமாக என்று முடிகின்றது செய்யுள்.

**கொன்றைத்தார்:** ஜோதியாய் நின்று உயிர்களுக்கு உபகரிக்கும் ஆண்டவனுக்கு உரிய அடையாள மாலை இது என்பது புராணக் கொள்கை. இம்மாலையைக் குறிப்பிடுவதால் இறைவனது உருவத் திருமேனியும் குறிப்பால் புலப்படுகிறது.

**பெய்வளை:** ஆகுபெயராய் உமாதேவியை உணர்த்துகிறது. 'பெய்வளை' என்று உமை அம்மையின் கைகளைக் குறிப்பதில், 'அஞ்ச வேண்டாம்' என்று அபயம் தந்து ஆட்கொள்ளும் அம்மை யின் இயல்பு சுட்டிக்காட்டப்படுகிறது.

# 15

ஓர் ஒருகால் 'எம்பெருமான்' என்றென்றே, நம்பெருமான்
சீர்ஒருகால் வாய்ஓவாள், சித்தம் களிகூர,
நீர் ஒருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்ப,
பார் ஒருகால் வந்தனையாள், விண்ணோரைத் தான்பணியாள்,
பேரரையற்(கு) இங்ஙனே பித்தொருவர் ஆமாறும்
ஆர்ஒருவர்? இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தாள்,
வார்உருவப் பூண்முலையீர்! வாயார நாம்பாடி,
ஏர்உருவர்ப் பூம்புனல்பாய்ந்(து) ஆடேலோர் எம்பாவாய்.

| | |
|---|---|
| வார் உருவப் பூண்முலையீர்! | =கச்சு அணிந்து அழகிய அணி கலன்களும் அணிந்த மார்பை உடையவர்களே! |
| ஓர் ஒருகால் | =ஒவ்வொரு சமயத்தில் |
| 'எம்பெருமான்' என்றென்றே | =எம்பெருமான் என்று என்று; எம் பெருமானே! என்று பல முறை கூறி |
| நம்பெருமான் சீர் | =நம்பெருமானுடைய சிறப்பை |
| ஒருகால் வாய் ஓவாள், | =ஒருபொழுதும் வாய் ஓயாமல் (இடைவிடாமல்) பேசுவாள், |
| சித்தம் களிகூர, | =சித்தம் களிப்புமிக |
| நீர் ஒருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்ப, | =கண்களினின்றும் நீர் ஒரு சமயமும் ஓயாத நெடிய தாரையாகப் பொழிய, |
| பார் ஒருகால் வந்தனையாள் | =நிலத்தில் ஒரே முறையான வணக்கத்தை மேற்கொள்வாள் (ஒரு பொழுது நிலத்தின் மீது விழுந்து விழுந்து வணக்கம் செய்வதை மேற்கொள்வாள்) |
| விண்ணோரைத் தான் பணியாள் | =மற்றைத் தேவர்களைச் சிறிதும் வணங்கமாட்டாள், |
| பேரரையற்கு இங்ஙனே பித்து ஒருவர் ஆமாறும்! | =தெய்வப் பேரரசனாகிய சிவபெருமான் பொருட்டு ஒருவர் பித்தராகும் திறனும் இவ்விதமே போலும்! |
| ஆர்ஒருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்? | =இம்முறையில் இவளை ஆட்கொள்ள வல்லவர் ஒருவர் யாரோ? |
| தாள் வாயார நாம்பாடி | =திருவடிகளை வாய்நிரம்ப நாம் பாடிக்கொண்டு |
| ஏர் உருவப் பூம்புனல் பாய்ந்து ஆடு. | =அழகுமிக்க தோற்றமுடைய தாமரை மலர்கள் நிறைந்த நீரில் பாய்ந்து ஆடுவோமாக. |

முந்திய பாட்டில், மெய்யன்புடையவர்களின் விளையாட்டுச் செயல்களும் இறைவன் பெருமைக் குணங்களுக்கு மாறுபட நிகழ்வன அல்ல என்னும் கருத்தை உணர்ந்து கொண்டோம். நீராடும் கன்னியர்கள் வாயிலாக ஞானபக்தியின் சிறப்பையும் சிவபெருமானது பெருமையையும் அவன் ஏவலால் சக்தி உயிர்களைப் பக்குவம் செய்யும் முறையையும் அறிந்து கொண்டோம், இத்திருப்பாட்டிலே. இறைவனது அருட்குணங்களில் ஈடுபட்டு அனுபவிக்கும்போது நிகழும் மெய்ப்பாடுகள் கூறப்படுகின்றன. இந்த மெய்ப்பாடுகள் தெய்வ வசமாகிய ஒருத்தியின் சொல்லும் செயலுமாக உரைக்கப்படுகின்றன. கன்னியருள் ஒருத்தி மற்றைப் பெண்களுக்கு அறிவிப்பதுபோல் அமைந்திருக்கிறது திருப்பாட்டு.

உலகியலை மறந்து மனமெய் மொழிகளை ஆண்டவனிடம் ஈடுபடச் செய்து தன்வசம் இழந்து நிற்கும் பேரன்பினளான ஒரு பெண்ணின் சித்திரம் இத்திருப்பாட்டின் முற்பகுதியில் இனிது புலனாகின்றது. இப்பெண்ணின் இயல்பை மற்றைப் பெண்கள் உணரும் வண்ணம் கன்னியருள் ஒருத்தி சுட்டிக் காட்டுகிறாள்.

'வார் உருவப் பூண்முலையீர்!' என்ற விளி, இக்கன்னியருள் வயதில் மூத்தவர்களை நோக்கி இளம்பெண் ஒருத்தி கூறுவது போல் இப்பாட்டு அமைந்திருப்பதைப் புலப்படுத்துகிறது.

**குறிப்புகள்:**

**ஆண்டில்** முதிர்ந்தவர்களாகிய பெண்களை நோக்கிச் சிவாநுபவ முதிர்ச்சியுள்ள ஒரு பெண்ணின் நிலை இது என்று இளம் பெண் ஒருத்தி குதூகலமாய்ப் பேசத் தொடங்குகிறாள், உலகியலின் இன்ப நுகர்ச்சிக்கு மாறாக ஆண்டவன் மீது கொள்ளும் இன்ப அன்பில் ஈடுபட்டிருக்கிறாள் இவள் என்ற குறிப்புடன் இப்பேச்சு அமைந்திருக்கிறது.

**வாய் ஓவாள்:** வாய் ஓயாமல் பேசுவாள் ஆண்டவன் பேச்சைப் பேசும்போது என்கிறாள். பேச்செல்லாம் இவளுக்கு

ஆண்டவன் பேச்சே. இறைவன் திருப்பெயரைக் கூறத் தொடங்கி விட்டால் 'எம்பெருமான், எம்பெருமான்' என்று பலமுறை பேசிக் கொண்டிருப்பாளாம். அப்பேச்சில் இறைவனைப் பற்றிய சிறப்பும் புகழ்மொழிகளும் அடுக்கடுக்காக வந்துகொண்டிருக்குமாம்.

**எம்பெருமான், நம்பெருமான்:** 'எம்பெருமான்' என்பது சிறப்பு மொழி; நம்பெருமான் பொதுமொழி. எம்பெருமான் என்பது சிவாநுபவப் பித்து உடைய அப்பெண்மணியின் கூற்று. நம் பெருமான் என்பது இங்கே பேசும் கன்னியின் கூற்று. இப்படிப் பொதுவும் சிறப்புமாக எம்பெருமான், நம் பெருமான் என்ற சொற்கள் இப்பாட்டின் முதல் அடியில் அமைந்திருப்பது இதற்கு ஒரு தனி அழகு தந்திருக்கிறது. இந்தவிதமாகத் திருவெம்பாவைப் பாடல் ஒவ்வொன்றுமே ஒருவகைத் தனிச்சிறப்பும் அழகும் வாய்ந் திருப்பது என்பதை உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

**களிகூர:** கூர்தல்=மிகுதல். கண்ணீர் இடையறாது நெடுந் தாரையாகப் பெருகுவது களிகூர்தலின் காரியம். எனவே இக்கண்ணீர் ஆனந்தக் கண்ணீர் என்பது குறிப்பு.

**பார் ஒருகால் வந்தனையாள்:** வந்தனை=வணக்கம். ஒருகால்= ஒரேமுறை அல்லது ஒரே நியமம். இதனால் சிவபெருமானை அன்றி வேறு தெய்வம் குறித்து வணங்கமாட்டாள் என்ற குறிப்பு நமக்குக் கிடைக்கிறது.

**விண்ணோரைத் தான்பணியாள்:** இதற்குமுன் இதே அடியில் குறிப்பாகச் சொன்னதை இங்கே வெளிப்படையாகச் சொல்லு கிருள். இப்படி இவளைப் பித்தேறச் செய்த வித்தகரின் திருவடி களைப் பாடி நீராடுவோம் என்கிருள்.



# 16

முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்(து), உடையாள்
என்னத் திகழ்ந்(து), எம்மைஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்(து),எம் பிராட்டி திருவடிமேல்
பொன்னஞ் சிலம்பில் சிலம்பி. திருப்புருவம்
என்னச் சிலைகுலவி, நந்தம்மை ஆளுடையாள்
தன்னில் பிரிவிலா எம்கோமான் அன்பர்க்கு
முன்னி, அவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழை!ஏலோர் எம்பாவாய்.

## பதவுரை

| | |
|---|---|
| | =மழையே! (மேகமே!) |
| மழை | |
| முன்னிக் கடலேச் சுருக்கி | =நீ கடலைச் சார்ந்து அது சுருங்குமாறு நீரை முகந்துகொண்டு |
| எழுந்து, | =வானத்தில் எழுந்து |
| உடையாள் என்னத் திகழ்ந்து, | =எம்மை உடையவளாகிய உமா தேவியைப் போல நிறம்பெற்று விளங்கி, |
| எம்மை ஆளுடையாள் இட்டிடையின் மின்னிப் பொலிந்து, | =எங்களை ஆட்கொண்டருளிய அந்த அம்மையின் சிறிய இடையைப் போல மின்னி விளங்கி |
| எம்பிராட்டி திருவடிமேல் பொன்னஞ் சிலம்பின் சிலம்பி, | =எங்கள் தலைவியின் திருவடிமேல் அணிந்த பொன்னால் ஆகிய அழகிய சிலம்பைப்போல் ஒலித்து (இடி இடித்து), |
| திருப்புருவம் என்னச் சிலைகுலவி, | =அந்தப் பிராட்டியின் அழகிய புருவம்போல வானவில்லை விளங்கச் செய்து |
| நந்தம்மை ஆளுடையாள் தன்னில் பிரிவிலா எம் கோமான் | =உயிர்களாகிய நம்மை ஆட் கொள்ளும் அம்மையினின்றும் பிரிவு இல்லாத (நீங்காது நிற்கின்ற) எங்கள் தலைவனாகிய சிவபெருமானுடைய |
| அன்பர்க்கும் முன்னி, அவள் நமக்குமுன் | =(அன்பர்க்கும் நமக்கும் அவள் முன்னி) அன்பர்களுக்கும் சிறியவர்களாகிய நமக்கும் அந்தஅம்மை முற்பட்டு நெருங்கி அருளத் திருவுள்ளம் கொண்டு |
| சுரக்கும் இன்னருளே என்ன | =சொரிகின்ற இனிமைமிக்க (நன்மை பயக்கும்) அருளைப்போல் |
| பொழியாய் | =(மேகமே! நீ) பொழிவாயாக. |

'மழையே! வா வா' என்று குழந்தைகள் கூடி நின்று பாடுவ துண்டு. அப்படியே மார்கழி நோன்பு என்ற பாவை நோன்பு நோற்கும் கன்னிப் பெண்களும் 'கார்ப்போட்ட'க் காலத்தில் கருக் கொண்ட மேகங்கள் தோன்றுவதுகண்டு குதூகலமாக, 'மழையே! நீ பொழிய வேண்டும்; நாடு செழிக்க வேண்டும்; நாங்கள் நல் வாழ்வு வாழவேண்டும், இல்லறத்தை நல்லறமாக நடத்த வேண்டும்' என்கிறார்கள். இப்படிப்பட்ட பாட்டொன்று ஆண் டாள் திருப்பாவையிலும் காணப்படுகிறது.

நாடு செழிக்க மழை பெய்ய வேண்டும் என்பது பொதுப் பயன். இது இப் பாட்டில் குறிக்கப்படுகிறது வெளிப்படையாக. கன்னிப் பெண்கள் நல்லறம் புரிந்து நல் வாழ்வு வாழ்வதற்கு மழையும் நாட்டின் செழிப்பும் இன்றியமையாதவை என்பது குறிப்பாக இங்கே கூறப்படுகிறது.

வானத்தைப் பார்த்தால் ஒரு கருங்கடலே அப்படி மேலே வந்து கிடப்பது போலத் தோன்றுகிறது. 'மேகமே! நீ போய்க் கடலைச் சுருக்கி வான வீதியில் இழுத்துக்கொண்டு வந்து விட் டாய்!' என்று நினைப்பது போன்ற குழந்தை யுள்ளத்துடன் இக் கன்னிப் பெண்களின் இப்பாட்டு அமைந்திருக்கிறது.

மேகக் கருமை வளத்திற்கு அறிகுறி. அந்த நிறம் உமை அம் மையின் அருள் வடிவத்தை நினைவூட்டுகிறது. 'உலக அன்னை யாகிய எங்கள் அம்மாதான் அப்படி வந்து காட்சி வழங்குகிறாள்!' என்று இவர்கள் எண்ணி மகிழுமாறு மேகக்கூட்டம் வானத்தில் தோற்றம் அளிக்க வேண்டுமாம்,

மேகங்களுக்கிடையே பளிச்சுப் பளிச்சென்று மின்வெட்டு கிறதே, அந்த மின்னல், தேவியின் இடைபோல் மின்னுகிறது என்பது இப் பெண்கள் நினைப்பு. கண்ணைப் பறிக்கும் மின்ன லுக்குப்பின் சில சமயங்களில் இடி இடிக்கும். அம்மையின் கொலுசு பாதரசங்கள் ஒலி செய்வது கேட்டுக் குழந்தைகள் மகிழ்வதுமுண்டு. இந்தப் பெண்களும் இடி இடிக்கக் கேட்டுக் களிப்படைகிறார்கள்.

ஒரு சமயம் மேகத்திற்கிடையே எவ்வளவு அழகாக, எவ்வளவு வசீகரமாகக் கிடக்கிறது வானவில்! 'சரி, சரி; அம்மா நம்மைப் பார்க்கிருள்; அந்த அழகிய புருவம்தான் அந்த வானவில்!' என்று மகிழ்ந்து போவார்களாம் இந்தப் பெண்கள்.

இப்படியெல்லாம் உலக அன்னையை நினைவூட்டும் மேகம் மழையாகப் பொழியும்போது, அன்னையின் இன்னருளே இறங்கி வருவதுபோலத் தோன்றுகிறது, இப் பெண்களின் பக்தியுள்ளங் களுக்கு.

திருவருள் மழைபோல் இறங்குகிறது அன்பர்மீது என்பது பக்திமதப் பெருங்கொள்கை. மழை அருள்போல் இறங்கிவர வேண்டும் என்று பக்தமணிகளான இப் பெண்மணிகள் ஆசைப் படுகிருர்கள்.

**குறிப்புகள் :**

முந்திய திருப்பாட்டில் இறைவனது திருவருளே சிவானுபவ நிலைக்குக் காரணமாகும் என்பதை உணர்த்திய மணிவாசகப் பெருமான், இத் திருப்பாட்டிலே அந்த அருளின் பாலிப்பு முறையை மழையைக் கொண்டு உணர்த்துகிருர். நீராடும் பெண்கள் பொய்கை நீரைப் பார்த்து அது மழையின் காரியம் என்று கருதியிருக்க வேண்டும். இந்த நிலையில் மழையை விளிப் பவராக இப் பாட்டைப் பாடத் தொடங்குகிருர்கள் இப் பெண்கள்.

**மழை :** இது மேகத்தை ஆகுபெயரால் உணர்த்துகிறது. 'பொழியாய் மழை!' என்பதில் மழை அண்மை விளியாகும். '(மழையே! என்று அழைக்காமல் 'மழை!' என்றுதானே அழைக்கிருர்கள்.)

இந்த மழைப் பாட்டு ஓர் அற்புதமான சப்தசித்திரம். பொருளழகோடு ஓசை யின்பம் போட்டி யிடுகிறது.





# 17

செங்கண் - அவன்பால், திசைமுகன்பால், தேவர்கள்பால்,

எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதா,

கொங்குண் கருங்குழலி! நந்தம்மைக் கோதாட்டி,

இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்

செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை,

அங்கண் அரசை, அடியோங்கட்(கு) ஆரமுதை,

நங்கள் பெருமானைப் பாடி நலம்திகழப்

பங்கயப் பூம்புனல்பாய்ந்(து) ஆடேலோர் எம்பாவாய்.

## பதவுரை

| | |
|---|---|
| கொங்கு உண் கருங்குழலி! | =மணம் ஊட்டப்பெற்ற கரிய கூந்தலையுடைய பெண்ணே! |
| செங்கண்-அவன்பால், | =சிவந்த கண்களையுடைய திருமாலிடத்தும், |
| திசை முகன் பால், | =நான்கு திசைகளிலும் முகங்களையுடைய நான்முகக் கடவுளிடத்தும், |
| தேவர்கள் பால் | =இந்திரன் முதலான தேவர்களிடத்தும் |
| எங்கும் இலாததோர் இன்பம் | =வேறு எவ்விடத்துள்ளவர்களிடத்தும் (வேறு எவரிடத்தும்) இல்லாததாகிய ஒப்பற்ற பேரின்பம் |
| நம் பாலதா | =அடியவர்களாகிய நம் இடத்தாகும்படி |
| நந்தம்மைக் கோதாட்டி, | =நம்மைக் குற்றம் களைந்து சீராட்டி, |
| இங்கு நம் இல்லங்கள் தோறும் எழுந்தருளி | =இங்கே நம்முடைய வீடுகள் தோறும் எழுந்தருளி வந்து (நம்முடைய இல்லங்களாகிய நெஞ்சகம் தோறும் எழுந்தருளியிருந்து) |
| செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை, | =சிவந்த தாமரை ஒத்த அழகிய திருவடிகளை எளிமையில் தந்தருளும் வீரனாகவும், |
| அங்கண் அரசை, | =அழகிய அருள்நோக்கம் உடைய அரசனாகவும், |
| அடியோங்கட்(கு) ஆரமுதை | =அடியோர்களாகிய நமக்குக் கிடைத்தற்கு அரிய அமுதமாகவும் உள்ள |
| நங்கள் பெருமானைப்பாடி | =நம்பெருமானைப் பாடி (நம்முடைய தலைவனைப் போற்றிப்பாடி) |
| நலம் திகழ | =எளியோமாகிய நமக்கும் நன்மை உண்டாகும்படி |
| பங்கயப் பூம்புனல்பாய்ந்(து) ஆடு. | =அழகிய தாமரைப் பொய்கையில் பாய்ந்து நீராடுவோமாக. |

முந்திய பாட்டில் உலக அன்னையுடன் வீற்றிருக்கும் இறைவனது அருள் மழைபோல் இறங்குவதையும், மழை அருள்போல் இறங்கி வருவதையும் குறிப்பிட்டார் மணிவாசகப் பெருமான். சக்தி மூலமாக ஆண்டவன் அன்பர்களுக்குச் சுரக்கும் அருட் பெருக்கை நினைவூட்டிக் கன்னியர்கள், அந்த அருளைப்போல மழை பெய்ய வேண்டுமென்று விரும்பியதாகப் பாடியிருக்கிறார்.

இத்திருப்பாட்டில் அன்னை உயிர்களின் குற்றங்களை நீக்கிச் சீராட்டுவதையும், அந்த அருளமுதத்தால் விளையும் இன்பம் எவ்வளவு அருமையானது என்பதையும் பாராட்டிப் பாடுகிறார்.

செருக்குடன் முனைந்து நிற்கும் விண்ணவர்கள் அடைய முடியாத இன்பம் அடியவர்களுக்கு உண்டாகுமாறு அருள் புரிகின்றான் இறைவன் என்பதும், அவன் அன்பர்களின் இல்லங்களுக்கு எழுந்தருளி அருளுக்கறிகுறியான திருவடிகளைத் தரும் சேவகனுவான் என்பதும், அவனைப் பாடிப் பூம்புனல் ஆடுவோம் என்று கன்னியர் கூறுவதும், இப்பாட்டின் திரண்ட பொருளாகும்.

சிவானுபவப் பேரின்பம், 'நாம் அறிந்தோம்' என்று செருக்கித்திரிபவர்களுக்குச் சித்திப்பதில்லை, எளியவர்களாகிய அன்பர்களுக்கே சித்திக்கிறது என்பதை இக்கன்னிப் பெண்கள் நன்கு உணர்ந்திருக்கிறார்கள். இப்பேரின்பத்தை அருளுவதற்காக இறைவன் அடியவர்களிடமுள்ள குற்றங் குறைகளைக் களைகிறான். செருக்கைப் புறக்கணிப்பவன், தாழ்ந்து பணிந்து பணிபுரியும் எளியவர்களிடம் தானே எழுந்தருளித் தன் பொன்னடிகளை வலியத் தந்து ஆட்கொள்ளுகிறானும்.

இறைவனை இப்பாட்டில் சேவகன் என்றும், அதே மூச்சில் அரசு என்றும், ஆரமுது என்றும் கூறுவதைக் காண்கிறோம். 'நங்கள் பெருமான்' என்றும் இக்கன்னியர்கள் பாராட்டுகிறார்கள்.

கன்னியர் பலரும் கூறி நீராடும்போது ஒருத்தியை நோக்கிக் கூறுவதுபோல் அமைந்திருக்கிறது இப்பாட்டு. 'கொங்கு உண் கருங்குழலி' என்று ஒருத்தியை விளித்துப் பேசுகிறார்கள் மற்றவர்கள்.

பிற இடங்களில் 'வாள்-தடங்கண் மாதே!' என்றும் 'நேரிழையாய்!' என்றும் 'முத்தன்ன வெண்ணகையாய்' என்றும் இவ்வாறு விளிக்கும்போது, பெண்களின் முன்னழகு சுட்டிக்காட்டப்பட்டது. இப்பாட்டிலோ 'கொங்கு உண் கருங்குழலி!' என்று பின்னழகு சுட்டிக்காட்டப்படுகிறது. 'விளிக்கப்பட்டவள் இறைவனுடைய அருட்பெருக்கையும் பேருபகாரத்தையும் விளையாட்டு நிலையில் புறக்கணிப்பதுபோல் திரும்பி நின்றுளாக, அந்நிலையில் அவள் கூந்தல் அழகைப் புகழ்வதுபோலச் சுட்டிக் கூறி வற்புறுத்தியபடியாம்' என்பது கதிர்மணி விளக்கப் பேருரை.

**குறிப்புகள்:**

**எங்கும்:** இது ஆகுபெயர்; 'விண்ணுலகத்தன்றிப் பிற இடங்களிலுள்ள முனிவர் முதலியோரிடத்தும்' என்பது பொருள்.

**ஓர் இன்பம்:** நித்திய இன்பமாகிய பேரின்பமானதால் ஒப்பற்ற இன்பம்-அதாவது ஈடும் எடுப்புமில்லாத இன்பம்-என்று கூறப்படுகிறது.

**கோதாட்டுதல்:** (கோது+ஆட்டுதல்) கோது என்ருல் குற்றம்; இங்கே 'ஆட்டுதல்' களைதல் என்று பொருள்படும். வினைமாசு போக்குவதை இங்கே கோதாட்டுதல் என்கிருர்.

**இங்கு:** இந்த மண்ணுலகிலே என்று பொருள் படுகிறது 'இங்கு'.

**சேவகன்:** வீரன் என்று பொருள் படுகிறது இச்சொல். இங்கே வீரம் கொடைவீரத்தைக் குறிக்கும். (கொடைவீரம் என்ருல் வண்மையாகிய வீரம்). பெருங்கொடையாளன் ஒரு பெருவீரனுவான்.

செங்கமலப் பொற்பாதம் தந்தருள வந்தருளும் வீரம் சாதாரண வீரமாகுமா?-என்பது குறிப்பு. இத்தகைய நலம் அருளுகின்ற இறைவனைப் பாடி நீராடுவோமாக என்கிருர்கள்.



# 18

அண்ணா மலையான் அடிக்கமலம் சென்(று) இறைஞ்சும்

விண்ணோர் முடியின் மணித்தொகைவீறு அற்றாற்போல்,

கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்ப,

தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள்—தாம்அகலப்

பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்

விண்ணாகி, மண்ணாகி, இத்தனையும் வேறாகி,

கண்ணார் அமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்

பெண்ணே! இப் பூம்புனல்பாய்ந்(து) ஆடேலோர்
எம்பாவ

## பதவுரை

| | |
|---|---|
| பெண்ணே! | =பெண்ணே! |
| அண்ணாமலையான் அடிக் கமலம் சென்று இறைஞ்சும் | =திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்கும் இறைவனுடைய திருவடித் தாமரை மலர்களைச் சார்ந்து வணங்குகிற |
| விண்ணோர் முடியின் மணித் தொகை | =தேவர்களது கிரீடத்தில் விளங்கும் பலவகைப்பட்ட இரத்தினங்களும் |
| வீறு அற்றாற் போல், | =பொலிவையும் ஒளியையும் இழந்திருப்பதுபோல, |
| கண் ஆர் இரவி | =எங்கும் பரவிய சூரியனின் |
| கதிர்வந்து கார்கரப்ப, | =கிரணங்கள் வெளிப்பட, அதனால் இருள் மறையவும், |
| தண் ஆர் ஒளிமழுங்கித் தாரகைகள் தாம் அகல, | =நட்சத்திரக் கூட்டங்கள் தம் மெல்லிய ஒளி மழுங்கிமறைய, |

[இந்த நிலையில் கன்னியர்களாகிய நாம்]

| | |
|---|---|
| பெண்ணாகி ஆணாய் அலியாய், பிறங்கொளிசேர் விண்ணாகி, மண்ணாகி, | =பெண்ணாகியும் ஆணாகியும் அலியாகியும் ஒளி விளங்கும் வானமாகியும் நிலமாகியும், |
| இத்தனையும் வேறாகி, | =இவைகளுக்கெல்லாம் வேறாகியும், |
| கண்ணார் அமுதமாய் நின்றான் கழல்பாடி | =கண் நிறைந்த அமுதமுமாய் நிலைபெற்று நிற்கும் இறைவனுடைய திருவடிகளைப் பாடி |
| இப்பூம்புனல் பாய்ந்து ஆடு | =இந்த அழகிய நீரில் பாய்ந்து குதித்து ஆடுவோமாக. |

அண்ணாமலையானை விண்ணோர் தரிசிக்க வந்து, அடிமலர்களில் வணங்குகிறார்களாம். இந்த விண்ணவர்கள் ஒளிமயமான நீல மகுடம் தரித்திருக்கிறார்கள். மகுடங்களில் நல்ல இரத்தினங்கள் இழைக்கப்பெற்றிருக்கின்றன. ஆனால் இந்த முடிமணிகள் எல்லாம் அடிக்கமலத்தின் பேரொளியிலே தங்கள் ஒளிகளை இழந்துவிடுகின்றனவாம். அதுபோலச் சூரியன்முன் இருளும் நட்சத்திரங்களும் மறைந்து போகின்றன.

அத்தகைய காலை வேளையில் அந்த ஒளிமயமான ஆண்டவன் திருவடியைப் பாடிப் பூம்புனல் ஆடுவோமாக என்பது பொருள்.

இத்திருப்பாட்டின் பிற்பகுதியில் அண்ணாமலையானின் இறை நிலை விளக்கப்படுகின்றது. இப் பெருமான் பெண்ணாகி ஆணாகி அலியுமாவான் என்கிறார். விண்ணும் மண்ணுமாகி இருக்கிறான். இவற்றிற்கெல்லாம் வேறாகியும் இருக்கிறான் என்கிறார்.

எல்லாமாகி இருக்கும் நிலையை இறைநிலை எனலாம். எல்லாவற்றையும் கடந்து வேறாகி நிற்கும் நிலையைக் கடவுள்நிலை என்று கூறலாம். இன்னும் ஒரு நிலை அன்பர்களுக்காக: கண் நிறைந்த அமுதமாய்க் காட்சி வழங்குவது இந்நிலை. ஞானானுபவத்திற்கு அமுதமயமாகி நிற்கும் நிலை இது. எனவே 'நின்றான் கழல்' என்கிறார். நிலைபெற்று நிற்கும் சிவபெருமானுடைய திருவடிகள் என்பது பொருள்.

கதிரவன்உலகத்திற்குக் கண்ணாவதுபோல், இறைவன் அன்பர் உலகில் கண் நிறைந்த அமுதமாக நிற்கிறானாம்.

விண்ணோர் முடிகளின் மாணிக்க ஒளி இறைவனது அடிச் சோதிக்குமுன் தனக்குரிய தனிச் சிறப்பை முற்றும் இழந்து விடுகிறது. சூரியோதயத்தில் இருள் மறைந்து நட்சத்திரங்களின் சிற்றொளியும் மறைந்து எல்லாம் ஒரே காலைக் கதிரமகாய்க் காணப்படுவதுபோல், விண்ணோர்களின் மகுடகோடி ஒளி மழுங்கிப் பொலிவிழக்க எல்லாம் அண்ணாமலையானின் அடிச்சோதியாகவே காணப்படுகிறதாம்.

**குறிப்புக்கள்:**

'அண்ணாமலையான் அடிக்கமலம்' என்று தொடங்கும் இத்திருப்பாட்டும், திருவெம்பாவை திருவண்ணாமலையில் இயற்றப்பட்டது என்பதற்கு ஒரு சான்றாகும். இதில் இறைவனது அத்துவித நிலையின் சிறப்பு உணர்த்தப்படுகிறது. அதாவது, இறைவனும் உயிரும் ஒன்றுபட்டு நிற்கும் நிலை.

இந்த அத்துவித நிலை இரண்டு உவமைகள் வாயிலாக விளக்கம் பெறுகின்றது. காலை வேளையின் நிகழ்ச்சியை உவமையாகக்கொண்டு இறைவனது அத்துவித நிலை விளக்கப்படுவதையும் காண்கிறோம்; இறைவனது அடிச்சோதியில் முடிசாய்க்கும் விண்ணோர்களின் மகுடங்கள் தனிச் சிறப்பை இழந்துவிடுவதை உவமையாகக் கொண்டு அதே அத்துவித நிலை விளக்கப்படுவதையும் காண்கிறோம். இந்த அத்துவித நிலை வேறு, சங்கரரின் அத்துவிதக் கொள்கை வேறு என்பது சைவர்களின் கருத்து.

சூரியோதயத்திற்கு முன்பே பொய்கைக்கு வந்து பங்கயப் பூம்புனல் பாய்ந்து ஆடுகிறார்கள் பாவை நோன்பு நோற்கும் கன்னிப் பெண்கள். நீராட்டத்திற்கு இடையே சூரியோதயம் ஆகிறது. கிழ்த் திசையில் கதிரவன் உதயமாகிவிட்டான் என்ற குறிப்பைச் சில கன்னியர் தங்களில் ஒருத்தியை நோக்கிப் புலப்படுத்துவதும் இப் பாட்டின் ஒரு நோக்கமாகும்.

'இறைவனும் உயிரும் முத்தி நிலையில் ஒன்றாகாமல், இரண்டாகாமல், ஒன்றும் இரண்டும் ஆகாமல் கலந்து நிற்கும்' நிலையை இப்பாட்டில் வரும் இரண்டு உவமைகளும் விளக்குகின்றன.

**கண் ஆர் அமுதமுமாய்:** இங்கே கண் ஞானத்தையும் அமுதம் ஞான ஒளியையும் குறிப்பன எனலாம்.

அதிகாலையில் நீராடச் சென்ற கன்னியர்கள் சூரியோதய காலம் வரை (புலர்காலை வரை) நீராடினர் என்பது குறிப்பு.





# 19

‘உங்கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம்’ [என்[று]

அங்[கு]அப் பழஞ்சொல் புதுக்கும்எம் அச்சத்தால்,

எங்கள்பெருமான்! உனக்[கு] ஒன்[று] உரைப்போம், கேள்:

எம்கொங்கை நின்அன்ப ரல்லார்தோள் சேரற்க;

எம்கை உனக்கல்லா[து] எப்பணியும் செய்யற்க;

கங்குல் பகல்எம்கண் மற்றொன்றும் காணற்க;

இங்கிப் பரிசே எமக்[கு]எம்கோன்! நல்குதியேல்,

எங்[கு]எழில்என், ஞாயி[று] எமக்கு? ஏலோர் எம்பாவாய்.

[மார்கழி நோன்பு என்ற பாவை நோன்பு முற்றிய காலத்தில் மார்கழி நீராடிய எங்களுக்குப் பரிசு தரவேண்டும் என்று கன்னியர் இறைவனைப் பிரார்த்திக்கலுறுகின்றார்கள்.]

எங்கள் பெருமான்! = எங்கள் பெருமானே! (எங்கள் தலைவனே!)

'உங் கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம்' என்று அங்கு அப்பழஞ் சொல் = உன்கையில் சேர்க்கப் பெறும் பின்னை உனக்கே அடைக்கலப் பொருள் என்று ஆட்பட்ட அக் காலத்தில் சொல்லிய அந்தப் பழமையான சொல்லை (அதாவது முதுரையை)

புதுக்கும் எம் அச்சத்தால் = புதுப்பிக்கும் எமது அச்சம் காரணமாக. (அச்சொல்லை மீண்டும் சொல்லுவது பொருத்தமன்று என்று உணர்ந்த யாம் எமது அச்சத்தினால்,)

உனக்கு ஒன்று உரைப்போம் கேள்! = உனக்கு ஒரு விண்ணப்பம் செய்து கொள்வோம், அதைக் கேட்டருள்வாயாக;

எம்கொங்கை நின் அன்பர் அல்லார் தோள் சேரற்க = எங்களுடைய கொங்கைகள் உன்னுடைய அன்பரல்லாதாரது தோள்களைத் தழுவாதொழிக;

எம் கை உனக்கு அல்லாது எப்பணியும் செய்யற்க; = எம் கைகள் உனக்கு அன்றி வேறொருவருக்கும் எத்தகைய தொண்டுகளையும் செய்யாதொழிக;

கங்குல் பகல் எம்கண் மற்றொன்றும் காணற்க = இரவும் பகலும் எமது கண்கள் உன்னையன்றி வேறொரு பொருளையும் காணாதொழிக;

இங்கு இப்பரிசே எமக்கு எங்கோன்! நல்குதியேல் = இவ்வுலகில் இவ்வாறே எங்களுக்கு எங்கள் தலைவனாகிய நீ அருளுவாயானால்

எங்கு எழில் என், ஞாயிறு எமக்கு? = கிழக்குத்திசை அன்றி வேறு எத்திசையில் சூரியன் உதிப்பினும் எமக்கு வரும் பயன் என்ன? (யாதும் இல்லை.)

முந்திய பாட்டில் இறைவன் நம் பக்குவ நிலைக்கு ஏற்றபடி வெளிப்பட்டருளும் முறை கூறப்பட்டது. அவ்விதமாக வெளிப் படும் இறைவனுக்குத் தம்மை அடைக்கலமாக ஒப்புவித்தவர்கள் அன்புப் பணிகள் புரிவார்கள் அல்லவா?-அப்பணிகள் நிறை வேறுவதற்கும் இறைவனின் துணை இன்றியமையாதது என்பதை இப்பாட்டில் அருளிச்செய்கிறார் மணிவாசகப்பெருமான்.

**உங் கையிற் பிள்ளை:** 'உன் கை' என்பது எதுகைக்காக 'உங் கை' என்று அமைந்திருக்கிறது. இந்தப் பழமொழி திரு மணக் காலத்தில் மணமகளை மணமகனிடம் ஒப்படைக்கப் பெற் றோர் கூறும் கூற்றாக வழங்கியதாய்க் கருதலாம். 'பிள்ளை'=பெண் பிள்ளை, பெண். சாதாரணமாகப் 'பிள்ளை' மகன் அல்லது சிறுவனைக் குறிக்கும். சிறுவர்களை ஆசிரியரிடம் ஒப்படைக்கும்போது இவ் வாறு பெற்றோர் கூறுவது ஒரு பழைய வழக்கம் எனக் கருதுவதும் பொருந்தும்.

**எங் கை உனக்கு அல்லாது எப்பணியும் செய்யற்க:** இந்தச் செய்யுட் பகுதியை ஒன்பதாம் பாட்டில் 'நின் அடியார் சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்' என்பதுடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம். இங்கே இறைவன் பணியும் அங்கே அடியவர் பணியும் கூறப்படுகின்றன. இவ்விருவகைப் பணிகளுக்கும் முரண்பாடு ஒன்றும் இல்லை. சிவனடியாரைச் சிவனாகவே மதித்துப் பணிபுரியும்போது, முரண்பாட்டுக்கு இடம் எங்கே? சிவனடியார் கணவராகும்போது அவர் இடும் கட்டளை சிவத் தொண்டாக முடிவது பொருத்தம்தானே.

ஆண்டவனிடம் அன்புடைய அடியவரை அவன் அருளால் கணவராகப் பெற்று இல்லறத்தை நல்லறமாகக்கொண்டு இசைந்து வாழ்க்கை நடத்தும்போது, கிழக்கே உதிக்கும் சூரியன் வேறு எத்திசையில் உதித்தால்தான் என்ன, அதனால் நமக்கு வரக்கூடிய தீங்கு ஒன்றும் இல்லை என்ற வைரம் பாய்ந்த மன உறுதி ஏற்படுகிறது.

**குறிப்புகள்:**

**புதுக்கும் எம் அச்சத்தால்:** புதுக்குதல்=மறுபடியும் சொல்லுதல். பெரியவரிடம் சிறியவர் அல்லது எளியவர் ஒன்று சொல்லும் போது, அவர்களுடைய கடமையை நாம் அறிவுறுத்தத் துணிஇேரமே என்ற நினைப்பில் அச்சம் ஏற்படுகிறது. இதைப் 'பய பக்தி' எனலாம்.

**உனக்கு ஒன்று உரைப்போம் கேள்:** வினயமாகப் பேசும் வழக்கத்தைத் தழுவியது இவ்வார்த்தை. பெரியவரை நோக்கி எளியவர், 'அடியேன் சொல்லக் கருதியது ஒன்று உண்டு, கேட்டருள வேண்டும்' என்று கூறுவதும், 'திருவடிக்கு ஒரு விண்ணப்பம்' என்று விண்ணப்பித்துக் கொள்வதும் பொருத்தமே.

**கங்குல் பகல்:** கனவிலும் நனவிலும் ஆண்டவனின் திருவுருவத்தைக் காணும் விருப்பம் இங்கே குறிக்கப்படுகிறது.

பரிசு=தன்மை
நல்குதல்=அருளுதல்

இறைவனது அத்துவித நிலையை முந்திய பாட்டில் அறிவுறுத்திய மணிவாசகப் பெருமான், அதன் தொடர்ச்சியாக இப்பாட்டிலே, அடைக்கலமாக நம்மை ஒப்புவித்தபின் நமக்கென்று ஒரு செயலும் இல்லை என்பதை நினைவூட்டுகிருர்; அடைக்கலமடைவதால் வரும் பயன்களை விரும்புவதும் தகுதி அன்று என்பதையும் குறிப்பிடுகிருர்.





# 20

போற்றி அருளுக, நின் ஆதியாம் பாத மலர்;

போற்றி அருளுக, நின் அந்தமாம் செந்தளிர்கள்;

போற்றி! எல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்;

போற்றி! எல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்;

போற்றி! எல்லா உயிர்க்கும் ஈறும் இணையடிகள்;

போற்றி! மால் நான்முகனும் காணாத புண்டரிகம்;

போற்றி! யாம் உய்யஆட் கொண்டருளும் பொன்மலர்கள்;

போற்றி! யாம் மார்கழிநீ ரா(டு) ஏலோர் எம்பாவாய்

[இறைவனே! உன் திருவடி மலர்களை எமக்கு அருளி எங்களைப் பாதுகாப்பாயாக என்பது இறுதிப் பிரார்த்தனை. இந்தப் பாதுகாப்பைப் பெற்றுக்கொண்டு மார்கழி நீராட்டத்தையும் போற்றிப் பாடி ஆடி வரவேண்டும் என்பது கன்னியர் ஆசை.]

போற்றி அருளுக நின் ஆதி யாம் பாதமலர்; =எம்மைப் பாதுகாத்து எப்பொருளுக்கும் ஆதியாகிய உன்னுடைய திருவடி மலர்களை அருளுவாயாக;

போற்றி அருளுக நின் அந்த மாம் செந்தளிர்கள் =எம்மைப் பாதுகாத்து எப்பொருளுக்கும் முடிவாகிய (முடிவிடமாகிய) சிவந்த தளிர்போன்ற திருவடிகளை அருளுவாயாக;

போற்றி! எல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்; =எல்லா உயிர்களுக்கும் தோன்றுதற்கு ஏதுவாகிய பொன்போன்ற திருவடிகள் எம்மைக் காத்தருள்க;

போற்றி! எல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள் =எல்லா உயிர்களுக்கும் பயன்களை நுகரச் செய்யும் ஏதுவாகிய அழகிய திருவடிகள் எம்மைப் பாதுகாத்தருள்க;

போற்றி! எல்லா உயிர்க்கும் ஈறும் இணையடிகள்; =எல்லா உயிர்களுக்கும் ஒடுக்கத்திற்கு ஏதுவாகிய இரண்டு திருவடிகளும் எம்மைக் காத்தருள்க,

போற்றி! மால் நான்முகனும் காணாத புண்டரிகம்; =திருமாலும் பிரமனும் காண இயலாத திருவடிகள் எம்மைக் காத்தருள்க;

போற்றி! யாம் உய்ய ஆட்கொண்டருளும் பொன் மலர்கள்; =நாமெல்லாம் உய்யும்படி ஆட்கொண்டு இன்பம் அருளும் (சிவப் பேறாகிய பேரின்பத்தை அருளுக) அழகிய திருவடிமலர்கள் (பொன்போன்ற திருவடிமலர்கள்) எம்மைக் காத்தருள்க;

போற்றி! யாம் மார்கழி நீராடு =நாங்கள் நீராடுவதற்கு அமைந்த இம் மார்கழி நீர் எமமைக் காத்தருள்க.

## தெளிவுரை

மேலைத் திருப்பாட்டிலே, அன்புப் பணிகள் நிறைவேறுவதற்கும் அவன் அருள் இன்றியமையாதது என்று கூறியவர், இப்பாட்டிலே இறைவன் உயிர்களைக் கொண்டு தனக்குத் தொண்டு செய்வித்துப் பயன் அளிக்கும் கடமையை மேற்கொள்கிறன் என்கிறர். கன்னியர்கள் தங்கள் மனமொழி மெய்களை அவன் பணிக்கே அவன் உரிமையாக்கிக் கொள்ள வேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டபின், மார்கழிப் பனிநீர் ஆட்டத்தை முடித்துக் கொள்கிறர்கள். அப்பால் அருளாளனுகிய இறைவன் தங்களைக் காத்தருள்வான் என்ற நம்பிக்கையுடன், 'போற்றி, போற்றி' என்று அவனைப் போற்றுகிறர்கள்.

இப்படிப் போற்றுகிறவர்கள் இறைவனது ஐந்தொழிலையும் நினைவூட்டிக் கொள்கிறர்கள். ஆக்குதலும் அளித்தலும் அழித்தலும் ஆகிய இறைவனது முத்தொழில்களை வைணவர் குறிப்பிடுவர். சைவசித்தாந்தத்தில் ஐந்தொழில் குறிக்கப்படுவதைக் காண்கிறேம்: (1) உடலைப் படைத்தல் அல்லது ஆக்குதல்.(2) அளித்தல், (3) அழித்தல். (4) மறைத்தல், (5) அருளுதல். இந்த ஐந்தொழிலுக்கும் இனமாகவே இறைவன் உயிர்களைத் தனக்குத் தொண்டு செய்வித்துக்கொள்கிறன், உரிய பயன்களையும் அளிக்கிறன்.

நீராட்டம் இனிது முற்றுப் பெற்றதும் பெண்கள் எல்லாரும் ஒன்ருகச் சேர்ந்து ஐந்தொழிலுக்கும் தலைவனுகிய சிவபெருமானை நோக்கி, 'எங்களைப் பாதுகாத்தருள வேண்டும்' எனப் போற்றி வேண்டிக் கொள்கிறர்கள்.

இறைவனைப் புகழ்ந்து பாடி நீராடுவதற்கு உரிய மார்கழி நீரையும் வேண்டிக் கொள்வதாக இப்பாட்டு முற்றுப்பெறுகின்றது. ஆண்டாளின் திருப்பாவை இக் குறிப்புடன் தொடங்குவதும், மணிவாசகப் பெருமானின் திருவெம்பாவை,

போற்றியாம் மார்கழிநீர்
ஆடேலோர் எம்பாவாய்

என்று இக்குறிப்புடன் முற்றுப்பெறுவதும் சிந்தனைக்கு உரியன.

**குறிப்புகள் :**

இப் பாட்டிலே 'போற்றி' என்னும் சொற்கள் எட்டு அமைந்திருக்கின்றன. இவற்றுள் முதல் இரண்டும் எச்சங்கள்; ஏனைய ஆறும், வியங்கோளாகக் கொண்டு பொருள், கூறத்தக்கன. 'அருளுக' என்பது எச்சங்களுக்கு முடிவு.

இறைவனைப் போற்றத் தொடங்கும் கன்னியர்கள் அவன் யாவர்க்கும் முன்னவன் என்பதை முதல்முதல் நினைவூட்டிக் கொள்கிறார்கள். முன்னவனே முடிவிடமாகவும் இருக்கிறான் என்பதைச் செய்யுளின் அடுத்த அடி உணர்த்துகிறது.

திருவடி என்பது திருவருளுக்கு நினைவுக் குறி. திருவடிகளே ஆதியும் அந்தமும் ஆகின்றன என்கிறார். இந்த அடிகளை 'மலர்' என்றும், 'தளிர்' என்றும் குறிப்பிடுவது கூர்ந்து நோக்கத் தக்கது. தளிரிலிருந்து மலர் தோன்றுகிறது; இது அந்தத்திற்கும் ஆதிக்கும் உள்ள தொடர்பு என்பதை உள்ளத்திற்கொண்டு இத் திருப் பாட்டின் முதல் இரண்டு அடிகளையும் ஓதி ஓதி உண்மை காண்பது நலம்.

ஆதிக்கும் அந்தத்திற்கும் இடையில் நிகழ்வன ஆண்டவனது ஐந்தொழில்கள். மூன்றும் அடியில் ஆக்கல் அல்லது படைப்பு குறிக்கப் படுவதைக் காண்கிறோம். அடுத்த அடியில் அளித்தலைப் போகம் என்கிறார் மணிவாசக அடிகள். ஐந்தாம் அடி அழித்தல்—தொழிலை 'ஈறு' என்று குறிப்பிடுகிறது. இந்த ஈறு வேறு, இரண்டாம் அடியில் வரும் 'அந்தம்' வேறு. அந்தம்=ஒடுங்கும் இடம்; ஈறு=மீண்டுவராத முத்தி நிலை.

ஏழாம் அடியில் உயிர்களை ஆட்கொண்டு முத்தியில் இறைவன் நிலைக்கச் செய்யும் நிலை குறிக்கப்படுகிறது. திருவடிகளே ஐந்தொழில்களையும் செய்கின்றனவாம். ஆம்; சக்திமயமான அருளைச் சுட்டிக் காட்டுகின்றன திருவடிகள்.

